ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:
ஸ்ரீ சுத்தஸத்வ மஹாகுரவே நம:

# ஜகாதாசார்யர் ஸ்வாமி ராமாநுஜர்

ஸ்வஸ்திஸ்ரீ ஹேவிளம்பி வருஷம் வைகாசி மாதம் 28ம் தேதி
(11.06.2017) ஞாயிற்றுக்கிழமையன்று நடைபெற்ற
சௌபாக்யவதி **ஸ்ரீரஞ்சனி** ❖ சிரஞ்சீவி **வெங்கடேஷ்**
விவாஹ சுபமுஹூர்த்தத்தை முன்னிட்டு வெளியிடப்பட்டது.



தாமான திருமேனி
ஸ்ரீரங்கம்



தாமுகந்த திருமேனி
ஸ்ரீபெரும்பூதூர்



தமருகந்த திருமேனி
திருநாராயணபுரம்

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமதே வரவரமுநயே நம:

ஸ்ரீ சுத்தஸத்வ மஹாகுரவே நம:

# ஜகாதாசார்யர் ஸ்வாமி ராமாநுஜர்



ஸ்ரீ பெருந்தேவி நாயிகா ஸமேத ஸ்ரீ வரதராஜப் பெருமாள் – கூத்தியம்பேட்டை

**ஸ்வாமி ராமாநுஜர் ஸஹஸ்ராப்தி ஹேவிளம்பி – 2017**

**ஸ்வஸ்திஸ்ரீ ஹேவிளம்பி வருஷம் வைகாசி மாதம் 28ம் தேதி (11.06.2017) ஞாயிற்றுக்கிழமையன்று நடைபெற்ற**

சௌபாக்யவதி **ஸ்ரீரஞ்சனி** ❖ சிரஞ்சீவி **வெங்கடேஷ்**

**விவாஹ சுபமுஹூர்த்தத்தை முன்னிட்டு வெளியிடப்பட்டது.**

ய
?
:"
ப
ா
ர்



ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் – திருக்கண்ணபுரம்

மூலம்

**ஸ்ரீ உ.வே. K.B. தேவராஜன் ஸ்வாமி**

(ஆஸ்தாந வித்வாந் ஸ்ரீ வானமாமலை மடம்)

---

அச்சிட்டோர்:

**ஆர்என்ஆர் பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ்**

No.19, தாண்டவராயன் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

போன்: 044 - 28447071.

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமதே வரவரமுநயே நம:

# ஜகதாசார்யர் ஸ்ரீ ராமாநுஜர்

## முன்னுரை

உலகில் வசிக்கும் ஒவ்வொரு மனிதனும் பற்பல இடர்பாடுகளில் சிக்கித் தவிப்பதைக் கண்கூடாகக் காண்கிறோம்.



நம்மாழ்வார் தாமிரபரணி நீரில் காய்ச்சிய பவிஷ்யதாசார்யர்
விக்ரஹத்தை மதுரகவியாழ்வாரிடம் கொடுத்தல்

இவ்விடர்பாடுகளினின்று நீங்கி இன்பவாழ்வு வாழ வழிமுறைகள் பலவற்றைப் பல தத்துவ ஞானிகளும் சமய வல்லுநர்களும் கூறியுள்ளனர். அந்த வழிகள் பெரும்பாலும் சுலபமாகச் செய்ய இயலாதவையாயும் சமுதாயத்தின் அனைத்துத்தரப்பினராலும் கைக்கொள்ள வாய்ப்பில்லாத வகையிலும் அமைந்துள்ளன. மனிதநேய உணர்வுடன் சமுதாயத்தின் அனைத்துத் தரப்பு மக்களையும் கருத்தில் கொண்டு எளிய வழியை உலகுக்கு அளித்திட்ட ஒரு ஒப்பற்ற மகான் சற்றேறக்குறைய 1000 வருடங்களுக்கு முன்பிருந்தார். அவர் பெயர் என்ன? அவர் யார்? அவர் எங்கிருந்தார்? அவர் எப்பொழுது இருந்தார்? அவர் என்ன

செய்தார்? அவர் காட்டிய வழி யாது? அவருக்காக நாம் என்ன செய்ய வேண்டும்? என்கிற கேள்விகள் மனதில் எழுகின்றனவல்லவா? ஆம். அவர்தான் "அனைத்துலகும் வாழப்பிறந்த எதிராச மாமுனிவர்" என்று கொண்டாடப்படுகிற இராமானுசர் ஆவார். அவருடைய வாழ்க்கை வரலாற்றினைத் தெரிந்துக்கொண்டால் மேற்கண்டுள்ள கேள்விகளுக்கான பதில்கள் விளங்கிவிடும். ஆகவே இராமாநுசரின் வரலாற்றினை தெரிந்து கொள்வோம்.



கீதாசார்யனே ஜகதாசார்யனாக அவதரித்தல்

## தோற்றம்

இன்றைக்குச் சற்றேறக்குறைய ஆயிரமாண்டுகளுக்கு முன்பு ஒரு பிங்கள வருடத்தில் சித்திரை மாதம் திருவாதிரைத் திருநாளில் வியாழக்கிழமை 1017 அன்று ஸ்ரீபெரும்பூதூரில் அவதரித்தார் இராமானுசர். இவருடைய தாயார் பெயர் காந்திமதியார். தந்தையாரோ சிறந்த வேத விற்பன்னரும் சோமயாகங்கள் செய்து புகழ் பெற்றவருமான கேசவ சோமயாஜியார். இராமானுசருடைய தாய்மாமா திருவரங்கத்தில் விளங்கிய ஆசாரியப்பெருந்தகை ஆளவந்தாரின் சீடரும் திருமலையில் திருவேங்கடவன் தொண்டில் ஈடுபட்டிருந்தவருமான திருமலைநம்பிகள். தம் சகோதரி, குழந்தை ஈன்ற செய்தி கேட்டு, மகிழ்ச்சியுற்றுத் திருவேங்கடமலையிலிருந்து ஸ்ரீபெரும்பூதூருக்கு விரைந்து வந்தார் திருமலைநம்பிகள். குழந்தையின் முகப்பொலிவையும் அழகையும் கண்டு பூரிப்பெய்தினார். இராமனுக்குத்தொண்டு செய்த லக்ஷ்மணனைப்



எதிராஜ நாதவல்லி – ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் (ஸ்ரீபெரும்பூதூர்)

போன்றே இத்தெய்வீகக் குழந்தையும் வருங்காலத்தில் இறைத்தொண்டு புரிவதில் தன்னிகரற்று விளங்குவார் என்று லக்ஷ்மணன் (இளையபெருமாள்) என்று வசிஷ்டர் பெயரிட்டாற்போல் திருமலை நம்பிகளும் குழந்தைக்கு “இளையாழ்வார்” என்று பெயர் சூட்டினார்.

இவர் யார்? நம்போன்ற ஒரு மனிதன் தானா? இல்லை இல்லை. மகிழ்ச்சியே நிறைந்துள்ள வைகுண்டலோகத்தில் நாராயணனுக்கு அனைத்துவித தொண்டுகளையும் செய்து அப்பரம்பொருளை ஆனந்தத்தில் ஆழ்த்தி அதனாலேயே ஆனந்தமடையும் தன்மை உடையவர்களுள் சிறந்தவரான ஆதிசேஷனே இராமானுசராக அவதரித்தார். புராணங்களில் இவருடைய அவதாரம் குறித்து முன்பே சூசனையாகக் கூறப்பட்டுள்ளது.

"அநந்த: ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணச்ச: தத:பரம்
பலபத்ரஸ்த்ருதீயஸ்து கலௌ கச்சித் பவிஷ்யதி"



(முதல் வடிவம் ஆதிசேஷன். அதன்பின் (ராமாவதாரத்தில்) அவரே லக்ஷ்மணனாக ஆனார். மூன்றாவதாக (க்ருஷ்ணா வதாரத்தில்) பலராமனாக ஆனார். கலியுகத்தில் யாரோ ஒரு மகானாகத் தோன்றுவர்) அந்த மகான் இராமானுசர் தாம் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. ஆகவே இராமானுசர் நம்மைப்போன்ற ஒரு மனிதன் அல்லர். அவர் நித்தியசூரிகளில் முதன்மையானவரான ஆதிசேஷனின் அவதாரம் ஆவார்.

## உயர்கல்வி

ஆதிசேஷனின் அவதாரமானவர் குருவிடம் கல்வி கற்றுத்தான் ஞானம் பெற வேண்டுமா? என்ற கேள்வி நிச்சயம் எழுந்தே தீரும். யாராயிருந்தாலும், மனிதனாகப் பிறந்துவிட்டால், உலக நடைக்குச்சேர ஒரு நற்குருவைப்பணிந்து கல்வி கற்றே தீரவேண்டும். இல்லையென்றால் ஒரு குருவினிடம் கேட்டே ஞானம் பெறவேண்டும் என்ற முறை அழிந்துவிடும். மேலும் அவரவர்கள் ஒவ்வொரு நூலுக்கும் தங்களின் எண்ண ஓட்டப்படி தவறான பொருள்கள் கூறி மக்களைக் குழப்பிவிடுவர். அதனால்தான் பரம்பொருளின் அவதாரமாயிருந்தும் ஸ்ரீராமபிரான் வசிஷ்டர் விசுவாமித்திரர் ஆகியோரிடமும் ஸ்ரீக்ருஷ்ணன் சாந்தீபனியினிடமும் சீடர்களாயிருந்தனர். அதே முறையில் இராமானுசரும், இளமையில் கற்கவேண்டும் வேதம் தர்க்கம் வியாகரணம் முதலான அடிப்படையாகக் கற்கவேண்டுமவற்றைத் தம் தந்தையாரிடம் கற்றார்.



இராமானுசரின் அறிவுப்பசி வேதக்கல்வியுடன் தீரவில்லை. தத்துவக்கோட்பாடுகளை அறிவிக்கும் வேதாந்தக் கல்வியில் நாட்டம் சென்றது. ஆனால் ஸ்ரீபெரும்பூதூரில் அந்நாட்களில் வேதாந்தம் பயிற்றுமவர் யாரும் இலர். காஞ்சீபுரத்துக்கருகில் உள்ள திருப்புட்குழி என்றும் க்ஷேத்ரத்தில் அத்வைத மதத்தைச்சேர்ந்த யாதவப்ரகாசர் என்ற துறவி மாணவர்களுக்கு வேதாந்தம் கற்பிக்கிறார் என்று கேள்வியுற்று அப்பாடசாலையில் சேர்ந்து கல்வி பயிலத் தொடங்கினார் இராமானுசர். அதன்பொருட்டு அவர் ஸ்ரீபெரும்பூதூரிலிருந்து காஞ்சிக்குக் குடிபெயர்ந்தார். அவர், ஆசார அநுஷ்டானங்களால்நிறைந்தகுடும்பத்தைக் சேர்ந்தவளும், தம் அழகுக்கும் அறிவுக்கும் ஆற்றலுக்கும் தக்கவளுமான தஞ்சமாம்பாள் என்ற நங்கையையும் திருமணம் செய்துகொண்டார். இல்லற வாழ்வும் இறையுணர் கல்வியும் இணைந்து இனிதே சென்றன. இராமானுசரின் சிற்றன்னையின் திருமகனார் கோவிந்தர் என்பவரும் இராமானுசருடன் வேதாந்தம் பயிலப் பாடசாலையில் சேர்ந்தார்.

## குருவுடன் கருத்து வேறுபாடு



ஆசிரியரான யாதவர் கூறி வந்த கருத்துக்களில் இளையாழ்வாரின் மனம் முழுவதும் உடன்படவில்லை. அதனால், ஆசிரியரின் பற்பல கூற்றுக்களை மறுக்கத் தொடங்கினார். இது ஆசிரியரின் மனதில் அச்சத்தையும், கோபத்தையும் உண்டு பண்ணிற்று. விளைவு, இராமானுசர் பாடசாலையிலிருந்து வெளியேற்றப்பட்டார். அவ்வளவிலும் அமைதியடையவில்லை யாதவர். இராமானுசரை அழிப்பதற்கென்றே கங்கைப் புனித யாத்திரைக்கு ஏற்பாடு செய்தார். யாத்திரை தொடங்கியது. கோவிந்தரும் இராமானுசரும் தனியாகத் தங்களுக்குள் சந்தித்துவிடாதபடியாதவர்மிகமிகவிழிப்புடன்பார்த்துக்கொண்டிருந்தார். யாதவரின் சூழ்ச்சியை முன்னமேயே தெரிந்துகொண்டு விட்டிருந்தார் கோவிந்தர். யாத்திரையின் இடையில், விந்தியமலைக்காட்டில் சென்று கொண்டிருக்கையில் கோவிந்தரும், இராமானுசரும் தனியாகச் சந்திக்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. அதனைப் பயன்படுத்திக்கொண்டே கோவிந்தர் குருவின் சூழ்ச்சியை இராமானுசர்க்குத் தெரிவித்து, அவரைத் தப்பிச்சென்று விடக்கூறிவிட்டுத் தாம் யாதவரின் குழுவில் சேர்ந்துகொண்டார். யாதவரோ, இராமானுசர் எங்கே எங்கே என்று கேட்டு, வன விலங்குகளால் அழிக்கப்பட்டிருப்பார் என்ற எண்ணத்தில், தமது யாத்திரையைத் தொடர்ந்தார்.




ஸ்ரீ ராமாநுஜர், ஸ்ரீ விஜயராகவப் பெருமாள்
திருப்புட்குழி

# வேடனா? வரதனா?




இளையாழ்வாரும் தெற்கு நோக்கிப் ப்ரயாணப்பட்டு, வழி தெரியாது ஒரு காட்டில் அகப்பட்டார்.

ஆங்கு ஒரு வேடனும் வேடுவிச்சியும் தோன்றி அவரைத் தங்களோடு அழைத்துவந்தனர். காட்டில் அன்றிரவு உறங்கி விடிந்தவுடன் எழுந்தபோது, வேடர்களைக் காணோம். வியந்த இளையாழ்வார், அருகிலிருப்போரை "இது எவ்விடம்" என்று வினவ, அவர்கள் "இது ஸத்யவ்ரத க்ஷேத்ரம், காஞ்சீபுரம். அதோ புண்யகோடி விமானம் தெரியவில்லையா?" என்றனர். தனக்கு வழிகாட்டிய வேடர்கள் காஞ்சீ வரதராஜப் பெருமாளும், பெருந்தேவித் தாயாருமே என்றறிந்த இளையாழ்வார் பரவசப்பட்டார். குருவின் கோஷ்டியோ, இளையாழ்வாரைக்காணாது அவர் கொடிய விலங்குக்கு அகப்பட்டிருப்பார் என்றெண்ணி காசியை அடைந்தனர்.



அந்நாளில் சென்னையை அடுத்த பூவிருந்தவல்லியில் வணிகர் குலத்துதித்த ஒருவர் இருந்தார். அவர் கமலாபதி என்பவரின் திருக்குமாரர் கஜேந்திரதாசர் என்பவர். காஞ்சி வரதராஜப் பெருமாளிடம் மிக்க பக்தி கொண்டு பெருமாளுக்கு ஆலவட்டத் (விசிறி வீசும்) தொண்டிலீடுபட்டிருந்தார். வரதராஜப்பெருமானும் அவரைத் தம் நண்பராகவே கருதி, தமது அர்ச்சை நிலை (விக்கிரமாக இருக்கும் தன்மை)யைக் கடந்து, அவருடன் தனிமையில் பேசவும் செய்தார். அவரே திருக்கச்சி நம்பிகள் என்று புகழ்பெற்றார். இன்றும் காஞ்சீபுரம் வரதராஜப்பெருமாள் திருக்கச்சி நம்பிகளுடன் அமர்ந்து பேசிய மண்டபம் “கச்சிவாச்சான் மண்டபம்” என்ற பெயருடன் விளங்கக் காணலாம். அவர் வரதராஜப்பெருமாளைக்குறித்து இயற்றிய நூலுக்கு தேவராஜ அஷ்டகம் என்று பெயர். இராமானுசர் அவரையே ஒரு உதாரண புருஷராகக் கொண்டு அவர் ஆலோசனைப்படி வரதராஜப்பெருமானுக்குப் பலவகையிலும் தொண்டாற்றி வந்தார். கங்கை யாத்திரை சென்ற யாதவர், காஞ்சி மீண்டுவந்து இராமானுசரைப் பார்க்கையில், இராமானுசருக்குப் பேரருளாளனாம் வரதராசனின் அருள் முழுமையாக உள்ளதைக்கண்டு ஆச்சரியக்கடலில் மூழ்கினார்.

# ஆளவந்தாரின் அருள் நோக்கு



வைணவ உலகில் தலைமைப்பீடமாம் திருவரங்கத்தில் வைணவ உலகின் தலைமைப் பொறுப்பேற்று வைணவக் கோட்பாடுகளைக் காத்துவந்தவர் யாமுனாசார்யர் என்ற ஆளவந்தார். அவர் இராமானுசரின் அறிவுத்திறனைப் பற்றியும், அவருக்கு யாதவப்பிரகாசரிடம் வேதாந்த விசாரத்தில் விளைந்த பிணக்கு பற்றியும் கேள்வியுற்று மகிழ்ச்சியுற்றார். அவரைக் காணவேண்டும் என்ற பேரவா உந்த காஞ்சிக்கு விரைந்து வந்தார். திருக்கச்சி நம்பிகளின் உதவியுடன் காஞ்சி வரதராஜப்பெருமாளைத் தொழுதார். தொழச் செல்லும்போது, யாதவப்பிரகாசரின் குழுவில் இருந்த இராமானுசரைத் திருக்கச்சி நம்பிகள் அடையாளம் கூறிக்காண்பிக்க அப்பொழுதே "ஆம் முதல்வன் இவன்" என்று அவரைத் தம் முழு அருள் நோக்கிற்கு இலக்காக்கினார். மேலும் இராமானுசர் யாதவப் பிரகாசரை விட்டு வந்து முழுவதுமாக வைணவக்கொள்கையைத் தழுவுமவராக விளங்க வேண்டும் என்று வரதராஜப்பெருமாளின் திருவடிகளில் சரணாகதி செய்தருளினார்.

## பேய் ஓடியது

அப்பொழுது காஞ்சிப்பகுதியின் மன்னன் மகள் பிரமரக்ஷஸ் என்னும் பேயினால் பீடிக்கப்பட்டு மிக்க அவதிக்குள்ளாயிருந்தாள். அப்பேயை ஓட்ட யாதவர் முயன்றும் அது மன்னன் மகளை விட்டு அகலவில்லை.



மேலும் அது "நான் இராமானுசரின் ஆணைக்கு மட்டும் தான் கட்டுப்படுவேன். உன் ஆணைக்குக் கட்டுப்படமாட்டேன்" என்று உறுதியாகக்கூறியது. மேலும், யாதவர் தம் முற்பிறவியில் மதுராந்தகத்தில்ஏரிக்கரையில் ஓர் உடும்பாக இருந்ததாகவும், யாத்திரையாக அங்கு வந்த சில திருமாலடியார்கள் உண்டு மிகுந்த உணவை எடுத்து உண்டதால், இப்பிறவியும் கல்விச்செல்வமும் அவருக்குக் கிடைத்தன என்று கூறிற்று. பின்பு இராமானுசரின் ஆணைக்குக் கட்டுப்பட்டு அந்தப் பேய், மன்னன் மகளைவிட்டு அகன்றது. அது கண்டு, முதலில் கோபமடைந்த யாதவர் பின்பு இராமானுசரை அவதார புருஷராக உணர்ந்தார். இராமானுசரை மீண்டும் தம் பாடசாலையில் பயில அனுமதித்திருந்தார். ஆனால் அது நெடு நாட்களுக்கு நீடிக்கவில்லை. வேதாந்த வாக்கியங்களுக்குப் பொருள் கூறும் விஷயத்தில், பற்பல இடங்களில் குருவுக்கும் சீடருக்கும் அவ்வப்போது விவாதம் இருந்து வந்தது. அதனால், இராமானுசரைத் தம் பாடசாலையிலிருந்து வெளியேற்றிவிட்டார். இராமானுசர் தம் தாயாரின் அறிவுரைப்படி, திருக்கச்சிநம்பிகளிடம் மிக நெருங்கியவரானார். அவருடைய சொற்படி வரதராஜப்பெருமாளின் தொண்டிலேயே முழுமையாக ஈடுபட்டார். ஒவ்வொரு நாளும் இராமானுசருக்குத் திருக்கச்சிநம்பிகள் மீது மதிப்பும் மரியாதையும் கூடிக்கொண்டே வந்தது.

# அரங்கத்துக்கு அழைப்பு



இராமானுசர் யாதவரிடமுள்ள தொடர்பிலிருந்து விடுபட்டார் என்ற செய்தியறிந்த ஆளவந்தார், தம் பிரதான சீடரான பெரிய நம்பிகள் என்ற மஹாபூர்ணரை அழைத்து இராமானுசரைக் காஞ்சியிலிருந்து திருவரங்கத்துக்கு அழைத்துவரப் பணித்தார். இராமானுசரோ தேவப்பெருமாளின் திருத்தொண்டிலேயே ஈடுபட்டு வேறொன்றையும் கவனிக்காமல் இருந்தார். அவரைத் தன்பால் கவர, பெரிய நம்பிகள் ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ரரத்னம் என்ற வடமொழித் துதிநூலினை உரத்த குரலில் இராமானுசர் செவியில் கேட்கும்படி இனிமையாகப் பாராயணம் செய்தார். சொல் நயம், பொருள் நயம், ஓசை இனிமை, தத்துவச்சிறப்பு, இறைவனின் குணங்கள், பகவானின் திருமேனி அழகு, அடியவர்களின் பெருமை, ஆசார்யரின் மேன்மை அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்ற ஒரு ஒப்புயர்வற்ற நூலிது. அதனைச் செவியுற்ற இராமானுசரின் மனதில் இதனை அருளிய மகான் யார் என்று அறிய ஆவலும் அவரை உடனடியாகத் தரிசிக்க வேண்டும் என்ற அவாவும் கிளர்ந்தெழ, அது ஆளவந்தாரின் அற்புதநூல் என்று பெரியநம்பிகளுடன் புறப்பட்டு இராப்பகல் நடந்து, காவிரியின் கரையில் நின்றபோது, ஆளவந்தார் இறைவனடி சேர்ந்தார் என்று சிலர் கூற, அதிகம் வருந்தினார். தமக்கு ஆளவந்தார் தரிசனம் கிடைக்க அருள் புரியாத அரங்கனிடம் கோபம் கொண்டு திருவரங்கம் வரைச் சென்றும் அவனைத் தரிசிக்காமல், காஞ்சி திரும்ப முயன்றார். பெரிய நம்பிகளோ, ஆசாரியரின் திருமேனியையேனும் தரிசிக்கலாம் என்று நிர்ப்பந்தித்து அழைக்க யாமுனாசார்யரான ஆளவந்தாரின் சரம (கடைசீ) திருமேனியை நன்கு தரிசித்தார்.

## மூன்று விரல்கள் மூன்று குறைகள்

ஆளவந்தாரின் சரம திருமேனியைத் தரிசித்த இராமானுசர், அவரது கைகளில் மூன்று விரல்கள் மடங்கியிருக்கக் கண்டார். இது அங்கிருந்த அனைவருக்குமே வியப்பையளித்தது. யாரும் அதற்கு முன் அவ்வாறு பார்த்ததில்லை. அவர் திருவுள்ளத்தில் ஏதேனும் குறையிருந்ததா என்று இராமானுசர் கேட்டார். அடிக்கடி ஆளவந்தார் மூன்று விருப்பங்களைத் தம் காலக்ஷேப கோஷ்டியில் தெரிவிப்பதுண்டு என்றனர். அவையாவன.

1. போதாயன மஹர்ஷி பிரம்ம சூத்திரத்துக்கு விளக்கவுரையாக எழுதிய விருத்தி உரையைத் தழுவி ஒரு எளிய வடமொழி விளக்கவுரை எழுதப்படவேண்டும். 2. நம்மாழ்வாரின் ஈரத் தமிழாம் திருவாய்மொழிக்கு ஒரு விளக்கவுரை எழுதப்படவேண்டும். 3. வைதிக மதத்துக்குப் பேருதவி புரிந்தவர்களான வியாஸ முனிவரிடமும் பராசர முனிவரிடமும் நன்றி வெளிப்படும் செயல் ஒன்று செய்யப்படவேண்டும்.




இவற்றைக்கேட்ட இராமானுசர் ஆளவந்தாரின் திருவடிகள் மீது ஆணையிட்டு, "இந்த ஆசாரியரின் அருள் அடியேன்பால் இருக்குமேயானால் இம்மூன்றையுமே இவ்வாசார்யரின் கட்டளையாக ஏற்று நிறைவேற்றுவேன்" என்று உறுதியளித்தார். அனைவரும் வியக்கும் வகையில் மடங்கியிருந்த விரல்கள்மூன்றும் நிமிர்ந்து விட்டன. அதன் பின் இராமானுசர் காஞ்சிக்கு திரும்பினார்.

# போனகம் செய்த சேடம்



திருக்கச்சி நம்பிகளையே தமது குருவாகக் கொள்ள எண்ணினார் இராமானுசர். சாத்திர வரம்பைச் சிறிதும் மீறாத பண்பாளாரான திருக்கச்சி நம்பிகள் அதற்கு உடன்படவில்லை. பின் என்ன செய்ய? இராமானுசர், "திருக்கச்சி நம்பிகள் உச்சிஷ்டத்தை (உண்டு மிகுந்ததை)த் தாம் உண்டுவிட்டால் அதுவே தாம் திருக்கச்சி நம்பிகளின் சீடர் என்ற

அடையாளத்தைத் தந்துவிடுமல்லவா? குருவின் உச்சிஷ்டத்தை மட்டுமே சீடன் உண்ணலாம். மற்றையோருடைய உச்சிஷ்டத்தை உண்ணலாகாது என்று சாத்திரம் கூறுகிறதே" என்று எண்ணினார். அதற்கான முயற்சிகளை மேற்கொண்டார் இராமானுசர். தம் மனைவி தஞ்சமாம்பாளிடமும் திருக்கச்சி நம்பிகள் உணவு உண்ண தங்கள் இல்லத்துக்கு எழுந்தருள இருப்பதைக்கூறி, ஆவன செய்யும்படி கூறினார். ஒரு குறிப்பிட்ட நாளில் திருக்கச்சி நம்பிகளைத் தம் இல்லத்துக்கு உணவு உண்ண அழைத்தார் இராமானுசர். அவரும் அவ்வழைப்பினை ஏற்றார். அந்த நாளும் வந்தது. திருக்கச்சிநம்பிகள் தங்கியிருந்த இடத்திற்கு சென்று அவரை அழைத்துவர இராமானுசர் சென்ற வேளையில், நம்பிகளோ, வேற்றுப்பாதையில் இராமானுசரின் இல்லத்துக்கு வந்து விட்டார். அவர் வரதராஜப்பெருமானின் தொண்டிற்கு உடனடியாகச் செல்ல வேண்டியிருந்ததால், இராமானுசரின் துணைவியார் அவருக்கு வயிறாற உணவளித்தார். அவரும் உண்டு சென்று விட்டார். ஆசார அனுஷ்டானங்களில் மிகக்கண்டிப்பாக இருந்த தஞ்சமாம்பாள், திருக்கச்சி நம்பிகள் உண்டு சென்றவுடன், அவர் உண்டு மிகுந்ததை அப்புறப்படுத்திவிட்டுப் புதியதாகத் தளிகை செய்து இராமானுசரின் வரவுக்காகக் காத்துகொண்டிருந்தார். வந்து பார்த்த இராமானுசர்க்கு இது பெரும் ஏமாற்றத்தைத் தந்தது. மனம் நொந்த இராமானுசர், தாம் திருக்கச்சி நம்பிகளின் சீடராக ஆவது தேவப்பெருமாளாம் வரதராஜப் பெருமாளுக்குத் திருவுள்ளம் இல்லை போலும் என்று ஒருவாறு உள்ளம் தேறினார். நம்பிகளின் உச்சிஷ்டம் தமக்குக் கிடைக்காதற்குக் காரணமாயிருந்த தம் மனைவியின் மீது மிக்கவருத்தம் உண்டாயிற்று.

## ஐயம் நீக்கிய ஐயன்

யாதவரிடமிருந்து நீங்கிய இராமானுசர் திருவுள்ளத்தில் வேதாந்தக்கருத்துக்கள் குறித்துப் பற்பல ஐயங்கள் எழுந்தன. அவற்றை நீக்க வல்லவர் யார் உள்ளார்? ஆகவே திருக்கச்சி நம்பிகள் மூலமாக வரதராஜப்பெருமாளைக்கொண்டு அதனை நீக்கிக்கொள்ள விழைந்தார். அதனால் அதுகுறித்துப் பெருமாளிடம் கேட்டுச்சொல்ல வேண்டும் என்று வேண்டினார். பெருமாளும் அவர் ஐயம் நீங்கும் பொருட்டு ஆறு வார்த்தைகளை அருளினார்.




ராமாநுசரின் ஐயப்பாடும் அருளாளனாம் வரதராஜப்பெருமாளின் விடைகளும் கீழ் தரப்படுகின்றன.

யம் : சாத்திரங்களில் பல தெய்வங்கள் பற்றியும் பற்பல உண்மைப் பாருள்களும் கூறப்பட்டுள்ளன. அவற்றுள், மேலான தத்துவமாக ள்ளது எது ?

ருளாளனின் விடை : அஹமேவ பரம் தத்வம். நானே (நாராயணனே) மலான உண்மைப்பொருள்.

ஐயம் : சாத்திரங்கள் பிரபஞ்சமும் பிரம்மமும் ஒன்று என்றும் வெவ்வேறு என்றும் பலவிதமாகக் கூறுகின்றன. ஒன்றா வேறானவையா ?

அருளாளனின் விடை : தர்சனம் பேத ஏவ ச. பிரபஞ்சமும் பிரம்மமும் வெவ்வேறானவையே.

ஐயம் : சாஸ்திரங்களில், முக்தி பெறப் பற்பல வழிகள் காட்டப்பட்டுள்ளன. (முக்கியமாக பக்தியோகம்) அவற்றுள், ஆன்மாவின் தன்மைக்குப் பொருந்திய, எளிய உயர்ந்த வழி எது ?

அருளாளனின் விடை : உபாயேஷு ப்ரபத்திஸ்யாத். உபாயங்களுள் பகவானையே உபாயமாகப் பற்றும் சரணாகதியே உயர்ந்தது.

ஐயம் : சாத்திரங்களின்படி முக்தி மார்க்கத்தைக் (பக்தி) கைக்கொண்டவர்கள் தங்கள் கடைசீக்காலத்தில் பகவானை நினைத்தால் தான் முக்தி என்று காட்டப்பட்டுள்ளது. அது எளிய உயர்ந்த மார்க்கத்துக்கு பொருந்துமா ?

அருளாளனின் விடை : அந்திமஸ்ம்ருதி வர்ஜநம். சரணாகதியைக் கைக்கொண்டவனுக்குக் கடைசீக்காலத்தில் பகவானை நினைக்க வேண்டும் நிர்ப்பந்தமில்லை.

ஐயம் : சாத்திரங்களின்படி முக்தி மார்கங்களைக் கைக்கொண்டவர்கள் தங்கள் முன்வினைகள் (பயன் கொடுக்கத் தொடங்கிவிட்ட ப்ராரப்த கர்மங்கள்) கழிந்த பின்பே முக்தி என்றுள்ளது. உயர் உபாயத்தைக் கைக்கொண்டவனும் அவை கழிந்தால் தான் முக்தி பெறுவானா ?

அருளாளனின் விடை : தேஹாவஸானே முக்திஸ்யாத். சரணாகதியைக் கைக்கொண்டவனுக்கு எப்பிறவியில் சரணாகதியை ஏற்றானோ அப்பிறவியின் முடிவிலேயே மோக்ஷம்.

ஐயம் : நான் யாரை ஆசார்யராகக் கொள்ள வேண்டும்.

அருளாளனின் விடை : மஹாபூர்ணம் ஸமாச்ரய. திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள பெரிய நம்பிகளை ஆசார்யராகக் கொள்ள வேண்டும்.

இவற்றை நன்கு அறிந்து கொண்ட இராமானுசரின் அறிவு மிகமிகத் தெளிவாயிற்று. இவையே அவர் பிற்காலத்தில் விசிஷ்டாத்வைத கருத்துக்களையும் சரணாகதி மார்க்கத்தையும் விளக்கும் பொருட்டு உலகுக்குத் தந்தருளிய ஒன்பது நூல்களுக்கும் காரணமாயின.



உலகத் துன்பங்களிலிருந்து விடுபட்டு பகவானின் நலமந்தமில்லதோர் நாடாம் பரமபதம் அடைய விரும்புமவன் உயர்தனி எட்டெழுத்து மந்திரமாம் மூல மந்திரத்தையும் அதனைத் தெளிவுறுத்தும் த்வய மந்திரத்தையும் அதன் விளக்கமான சரமச்லோகத்தையும் அறியவேண்டும். இந்த உபதேசத்தினை உள்ளடக்கிய பஞ்சஸம்ஸ்காரம் செய்விப்பவரே ஆசாரியராவார். இங்குப் பஞ்சஸம்ஸ்காரம் என்றால் என்ன என்பதை அறிய வேண்டும்.



ஸ்வாமி ராமானுஜருக்கு பஞ்ச சம்ஸ்காரம் நடந்த-மண்டபம் !

மேற்கூறிய மூன்று மறைபொருள்களும், ஆத்மாவின் உண்மை நிலையைப்பற்றிய ஞானத்தை அடிப்படையாகக்கொண்டு எழுந்தவை. அவற்றை உபதேசம் செய்யும் முறை ஐந்து சடங்குகளாக அமைந்தது. அதனால் பஞ்சஸம்ஸ்காரம் என்று கூறப்படுகிறது. அவை தாபம், புண்ட்ரம், நாமம், மந்த்ரம், யாகம் என்பவை.

1. தாபம் : ஞானம் பெற விரும்பும் ஆத்மா எந்த உடலில் உள்ளதோ, அவ்வுடல் முதலில் தூய்மை பெற வேண்டும். அது வெறும் நீரால் மட்டுமே அமையக்கூடியதல்ல. எம்பெருமான் திருநாராயணனின் இரண்டு முக்கிய ஆயுதங்களான சங்கு சக்கர முத்திரைகளை ஆசாரியன் மூலமாகக் காய்ச்சித் தோள்களில் பொறித்துக்கொள்ளுதல் தாபம் என்கிற ஸம்ஸ்காரம்.



2. புண்ட்ரம் : நாம் பகவான் நாராயணனின் அடிமை என்பதற்கு அடையாளமாக நம் நெற்றியிலும் உடலிலுமாகத் தரித்துக்கொள்ளும் பன்னிரண்டு திருமண்காப்புகள். (நாமங்கள்) இவற்றை முதன்முதலில் ஆசார்யரே நமக்கு பகவானின் கேசவன் முதலான பன்னிரண்டு நாமங்களையும் இலக்குமியின் ஸ்ரீ முதலான பன்னிரு நாமங்களையும் கூறி, அணிவிப்பார்.

3. நாமம் : பொதுவாக நமக்கிடப்படும் பெயர்கள் உடலை மனதிற்கொண்டே இடப்படுகின்றன. உடலோ ஒவ்வொரு பிறவியிலும் மாறுவதன்றோ ? அதனால் மாறாதிருக்கும் இவ்வாத்மாவுக்கு அழியாத பெயரான "தாஸன்" (அடிமை) என்னும் சொல்லுடன் கூடிய ஒரு பெயரைச் (அந்தந்த ஆசார்யரின் பரம்பரை வழக்கப்படி) சூட்டுவார் ஆசார்யர்.

4. மந்த்ரம் : மேற்கூறிய மூன்று சடங்குகளால் நாம் மந்த்ரத்தை உபதேசம் பெறத்தகுதியுள்ளவர்களாகிறோம். அதன்பின் வேதத்தின் இரகசியமான மூன்று மந்திரங்களையும் ஆசாரியர் சீடனின் வலச்செவியில் உபதேசிப்பார்.

5. யாகம் : அதன்பின் பகவானுக்கு நாம் திருவாராதனம் (பூஜை) செய்ய நியமனம் தருகிறார் ஆசாரியர்.

இவற்றை இராமானுசர் திருவரங்கத்து பெரிய நம்பிகளிடமன்றோ பெறமுடியும். அதனால் திருவரங்கம் நோக்கி புறப்பட்டார். இதனிடையில் திருவரங்கனின் ஆணைப்படி பெரியநம்பிகள் இராமானுசருக்குப் பஞ்சஸம்ஸ்காரம் செய்விக்கத் திருவரங்கத்தினின்றும் புறப்பட்டுக் காஞ்சியை நோக்கி வந்து கொண்டிருந்தார். இருவருக்கும் மதுராந்தகத்தில் சந்திப்பு நிகழ்ந்தது. பெரிய நம்பிகளை வணங்கி, மனித உடல் நிலையற்றது. "மின்னின் நிலையில் மன்னுயிராக்கைகள்" என்றாரன்றோ ஆழ்வார். ஆளவந்தார் விஷயத்தில் தான் பார்த்து விட்டாமே. இப்பொழுதே இரகசியங்களை உபதேசிக்கவேண்டும் என்று நிர்பந்தித்து வேண்டினார். இராமாநுசரின் துடிப்பைக் கண்டு, மிக மகிழ்ந்த ஆசாரியர், மதுராந்தகத்து இராமபிரான் ஸன்னதிக்கருகிலிருந்த மகிழமரத்தடியில் அவரை அமர்த்திப் பஞ்சஸம்ஸ்காரம் செய்தருளினார். பின்பு இராமானுசர் தம்மாசாரியரையும் அழைத்துக்கொண்டு காஞ்சி மீண்டார். தமதில்லத்திலேயே ஒரு பகுதியை அவருக்களித்து அனுதினமும் அவரிடத்தில் ஸம்ப்ரதாயத்தின் ஆழ்பொருள்களைக் கற்றார்.



ராமானுஜர் அநந்தஸரஸ்ஸில் ஸந்யாஸாச்ரமம் ஏற்றல்

இறையுணர்வும் பாகவதார்கள் என்பவர் எப்பிறப்பினா ராயிருத்தலும் உயர்ந்தவர்கள் என்னும் உணர்வும் உலகிலுள்ளோர் அனைவரும் நன்மை பெறவேண்டும் என்ற உணர்வும் இராமானுசரின் திருவுள்ளத்தில் நாள்தோறும் வளர்ந்துகொண்டே வந்தன. ஆனால் தஞ்சமாம்பளின் எண்ண ஒட்டங்களோ வர்ண ஆசார அனுஷ்டானங்களிலேயே தஞ்சமடைந்துவிட்டன. ஒரு தினம் ஒரு பாகவதோத்தமர், பசியால் வாடி உணவு கேட்டபொழுது, நிறைந்த உணவிருந்தும், இல்லையென்று கூறி விட்டார் தஞ்சமாம்பாள். பின்பு இராமானுசர் உள்ளே சென்று பார்க்கையில் உணவிருக்கக் கண்டார். தன் மனைவி செய்தது இராமானுசரின் மனதை மிக வாட்டியது. எல்லாவற்றுக்கும் மேலாக இராமானுசரின் ஆசாரியரான பெரிய நம்பிகளின் துணைவியாரிடமும் குலம் பற்றிய குறைகண்டு, அவரிடம் சண்டையிட்டு, அதன் விளைவாக, பெரிய நம்பிகள் தம் துணைவியாருடன், இராமானுசருக்குச் சொல்லாமலே திருவரங்கம் புறப்பட்டுவிட்டார். இது மன்னிக்கமுடியாத குற்றமாம். ஆசார்ய அபசாரமாம். அதனால் சீற்றத்தின் எல்லைக்கே சென்று விட்டார் இராமானுசர். விளைவு, மனைவி உயிர்வாழத்




தேவையானவற்றைச் செய்துவிட்டு இல்வாழ்வைத் துறந்தார். காஞ்சி வரதராஜப் பெருமாளின் புஷ்கரிணியான அனந்தஸரஸ் என்னும் திருக்குளத்தின் கரையில் துறவறம் மேற்கொண்டு முக்கோல் பிடித்த முனியானார். வரதராஜப்பெருமாள் சூட்டிய யதிராசர் (துறவிகளின் தலைவர்) என்ற பெயரும் பெற்றார். அகிலத்தின் அனைத்து ஆன்மீக ஒளியும் தம் திருமுகத்தில் குடி கொண்டவராக இராமானுசர் இருந்தார். முதலில் இராமானுசரின் மருமகனார் (ஸஹோதரி மகன்) தாசரதி என்ற பெயர்பெற்ற முதலியாண்டானும், கூரம் என்னும் நகருக்குத் தலைவராயிருந்த ஸ்ரீவத்ஸாங்கர் என்ற கூரத்தாழ்வானும் சீடர்களாகச் சேர்ந்தனர். தம் சீடர்களுடன் சேர்ந்து வரதராஜப்பெருமாளின் திருத்தொண்டில் முழுமூச்சாக ஈடுபட்டார் இராமானுசர். தம் சீடர்களுக்கு சாஸ்த்ர ஸம்ப்ரதாய அறிவு புகட்டிக்கொண்டிருந்தார். இராமானுசரின் பெருமை நாள்தோறும் பரவியது. பற்பல சீடர்கள் நற்பொருளறிந்து உய்ய அவரிடம் வந்து சேர்ந்தனர்.

## குருவும் சீடரானார்




முதலில் இராமானுசர், யாதவப்ரகாசரிடம் வேதாந்தம் வாசித்தார் என்ற கண்டோமல்லவா ? யாதவரின் தாயார், இராமானுசரின் இறைத்தொண்டிலும், ஞானப்பெருமையிலும், பெரும்புகழிலும் ஈடுபாடு கொண்டார். அவர், தம் மகனான யாதவரிடம், இராமானுசரின் சீடராகும்படி பலகால் வேண்டினார். தாயின் சொற்படி யாதவரும், இராமானுசரின் சீடராகி விசிஷ்டாத்வைத மதக்கொள்கையைத் தழுவினார். அவர் கோவிந்த ஜீயர் என்று பெயரிடப்பட்டார். துறவிகள் கடைபிடிக்கவேண்டிய நெறிமுறை குறித்து யதிதர்ம ஸமுச்சயம் என்ற வடமொழி நூலையும் இயற்றினார்.

# தேவராஜனா? தியாகராஜனா?



திருவரங்கம், ஸ்ரீவைஷ்ணவத்தின் தலைமைப்பீடம். ஆளவந்தார் பரமபதம் எய்தியபின், அங்கிருந்தவர்கள் அவரையொத்த ஓர் ஆசார்யர் கிடைப்பாரா என்று ஏங்கியிருந்தனர். இராமானுசரின் ஆசார்யரான பெரியநம்பிகள், எப்படியேனும் இராமானுசரைத் திருவரங்கத்துக்கு அழைத்துவர எண்ணினார். திருக்கச்சி நம்பிகளையும் திருக்கச்சி வரதனையும் விட்டுவர அவர் தாம் ஸம்மதிப்பாரா ? அல்லது வரதன் தான் அனுப்பிவிடுவானா ? இதற்கு ஒரு உபாயம் செய்த அவர், ஆளவந்தாரின் சீடர்களுள் ஒருவரான திருவரங்கப்பெருமாள் அரையர் என்பவர், திருவரங்கனுக்குத் திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களைத் தேவகானத்தில் பாடி மகிழ்விக்கும் தொண்டில் ஈடுபட்டவர், அவரையழைத்துச் சில வழி முறைகளைத் தெரிவித்து அதன்படி செய்யச் சொல்லிக் காஞ்சிக்கு அனுப்பினார் பெரியநம்பிகள். காஞ்சி வந்த அரையர், வரதராஜப்பெருமாள் திருமுன்பு நின்று தன் இசைத்திறனெல்லாம் வெளிப்படும் வண்ணம், அழகிய குரலில் ஆழ்வார்களின் அமுததமிழாம் பாசுரங்களைப் பாடினார். பாட்டுப்பிச்சனான வரதராஜப்பெருமாள் தன்னை மறந்தான். அவனோ வரங்களைத் தருபவனாயிற்றே. அதனால்



தானே வரதன் என்ற பெயர் பெற்றான். தேனுண்ட வண்டுபோல் பாட்டுக்கு மயங்கி, "அரையரே உமக்கு என்ன வரம் வேண்டுமோ பெற்றுக்கொள்ளலாம்." எனத் திருவாய்மலர்ந்தருளினான். இதுவே தக்க தருணம் என்று எண்ணியஅரையர், பெரியநம்பிகள் சொற்படி "திருவரங்கனின் விருப்பப்படி நம் இராமனுசனைப் பரிசாகத் தரவேண்டும்" என்று வேண்டினார். வாக்களித்துவிட்டதால், பின்வாங்க இயலாமல் தேவராஜனான வரதன் மிக வருத்தத்துடன் திருவரங்கனுக்கு இராமானுசரைத் தியாகம் செய்து தியாகராஜனாகி விட்டான்.



காஞ்சியிலிருந்து திருவரங்கம் புறப்பட்டபோது இராமானுசருடன் அவருடைய சீடர்கள் கூரத்தாழ்வான் முதலியாண்டான் முதலான பலரும் திருவரங்கம் சென்றனர். இராமானுசரின் வருகையால் திருவரங்கமே மகிழ்ச்சிக்கடலில் ஆழ்ந்தது. அனைவருக்கும் மேலாகத் திருவரங்கப்பெருமாளாம் ஸ்ரீரங்கநாதன் கொண்ட மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. திருவரங்கன் இராமானுசரை அழைத்து “வாரீர் உடையவரே. உபயவிபூதி ஐச்வர்யத்தையும் உமக்குத் தந்தோம்” என்று பேரருள் செய்தார். அது முதல் இராமானுசருக்கு “உடையவர்” என்கிற சிறப்பு பெயரும் விளங்கியது. அதுமுதல் திருவரங்கனின் கோயில் பணிகள் பல ஒவ்வொன்றாக இராமானுசரின் பொறுப்பில் வந்தது.



ஸ்ரீ திருமாமகள் ஸமேத ஸ்ரீ சௌம்யநாராயணன் – திருக்கோட்டியூர்



திருக்கோட்டியூர் நம்பி, திருக்கோட்டியூர் ராமாநுஜர் – திருக்கோட்டியூர்



இராமானுசர் பெரிய நம்பிகளின் சீடரானதை முன்னமேயே பார்த்தோம். இராமானுசர் ஒரு பல்கலைக்கழகம் ஆகத் திகழவேண்டும் என்ற எண்ணம் ஆளவந்தாருக்கு இருந்தது. அவர் தம் ஞானம் முழுவதையும் ஐந்தாகப்பிரித்து ஒவ்வொன்றை ஒவ்வொருவருக் கென்று ஐவரிடம் தந்திருந்தார். பெரிய நம்பிகளிடம் இராமானுசர் பஞ்சசம்ஸ்காரம் பெற்று த்வய மந்திரத்தின் விளக்கத்தையும் வைணவக் கோட்பாடுகளையும் கற்றறிந்தார். வைணவக்



கொள்கைகளில் தலைசிறந்தது சரணாகதி தர்மமாகும். அதற்கு அடிப்படை சரமசுலோகமாகும். இம்மந்திரத்தின் ஆழ்பொருள்களை ஆளவந்தாரின் சீடரான திருக்கோட்டியூர் நம்பிகள் நன்கறிந்திருந்தார். அவர் திருக்கோட்டியூரில் வாழ்ந்துவந்தார். சரமசுலோகத்தின் ஆழ்பொருள்களைத் தகுதியுள்ளவர்களுக்கே, அவர்களின் தகுதியையும் கற்பதில் உள்ள ஆர்வத்தையும் நன்கு சோதித்தறிந்தபின்பே உபதேசிக்க வேண்டும் என்ற நிலைப்பாட்டில் உறுதியுடனிருந்தார் அவர். முதன்முறை இராமானுசர் திருக்கோட்டியூருக்குச் சென்றார். நம்பிகளோ தன் பெருமையை யாரும் அறியாதபடி, தம் இல்லத்திலேயே இருந்திருந்தார். அவருடைய இல்லம் இருக்குமிடத்தைக் கேட்டறிந்த இராமானுசர். அவ்வில்லம் கண்ணில் பட்டதிலிருந்து அதனைக் கீழே விழுந்து வணங்கிக்கொண்டே வழி நெடுகிலும் சென்றார். அப்பொழுது தான் அவ்வூரிலிருந்தவர்களுக்கே திருக்கோட்டியூர் நம்பிகளின் பெருமை தெரிந்தது. நம்பிகள் இராமானுசரின் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்காமல் ஏதோ சாக்குபோக்குச் சொல்லிவிட்டு, இன்னொரு முறை வாரும் என்று திருப்பி அனுப்பிவிட்டார். இவ்வாறு ஒரு

முறை இருமுறைகளல்ல, பதினேழு முறைகள், தம் திருவரங்கக் கைங்கர்யத்துக்குப் பாதிப்பில்லாமலும் ஊக்கமும், உற்சாகமும் இழக்காமலும் திருவரங்கத்திலிருந்து திருக்கோட்டியூருக்கு நடைப்பயணமாகவே சென்று திரும்பி வந்தார் இராமானுசர். "தலைசிறந்த துறவியான இராமானுசர்க்கே இவ்வளவு இழுபறியென்றால் நமக்கெல்லாம் இரகசியப்பொருள்களை எங்கே சொல்லப்போகிறார் நம்பிகள்" என்று ஊரிலுள்ளோர் எண்ணினர். அதனால் அவர்கள் இராமானுசரை அழைத்து (அவருடன் முக்கோலின் ஸ்தானத்தில் முதலியாண்டானும் ஜல பவித்ரத்தின் ஸ்தானத்தில் கூரத்தாழ்வானும் இருந்ததால்) அவர்க்குத் திருமந்திரத்தின் ஆழ்பொருள்களை மட்டுமே அறிவித்தார். தாம் உபதேசம் செய்யும் அர்த்தங்களை இராமானுசர் கடினமாக சோதிக்காமல் யாருக்கும் கூறலாகாது என்ற உறுதிமொழி சபதத்தைத் தம் பாதங்களின் மீது ஆணையாக இராமானுசரிடமிருந்து பெற்றபின்பே அவ்வர்த்தங்களை உபதேசித்தார். அவ்வர்த்தங்களை அறிந்த இராமானுசர், திருக்கோட்டியூர் அஷ்டாங்க விமனத்திலேறி மேல் தளத்திலிருந்த தெற்காழ்வார் ஓலக்கமண்டபத்தில் ஆசை உடையவர்களை அழைத்து உபதேசித்தார். இதனைச்செவியுற்ற நம்பிகள் இராமானுசரை அழைத்து "எம் ஆணையை மீறியதன் பயனாக நரகம் தான் கிடைக்கும் என்றறிந்தும் ஏன் அவ்வண்ணம் செய்தீர்" என்று கேட்டார். இதற்கு இராமானுசர் அளித்த விடை நம்பிகளை வியப்பிலும் திகைப்பிலும் ஆழ்த்தியது. "நான் ஒருவன் மட்டும்தானே நரகம் போவேன், இத்தனை பேர் மோக்ஷம் செல்வார்களன்றோ !" என்று கண்ணீர்மல்கக் கூறினார். இராமானுசரின் இவ்வார்த்தகளைக்கேட்ட நம்பிகள் அவருடைய பரந்த திருவுள்ளத்தினை அறிந்து மகிழ்ந்தார். வாரி அணைத்தார். "எம்பெருமானாரோ" என்று வியந்தார். அதனால் இராமானுசரின் பெயர் "எம்பெருமானார்" என்று நிலைபெற்றது. திருக்கோட்டியூர் நம்பியோ அர்த்தத்தின் சீர்மையைப்பார்த்தார். அதனால் அவர் கேட்பவர்களின் தகுதியைப் பரிசோதித்து அர்த்தங்களை உபதேசித்தார். ஆனால் இராமானுசரோ மக்கள் படும் அனார்த்தத்தைப் பார்த்து அவர்கள் படும் துன்பத்திலிருந்து விடுபடவேண்டும் என்ற பரந்த உள்ளத்துடன் அனைவருக்கும் மந்திரத்தின் பொருளைச் சொன்னார். மனித நேயத்தின் மகத்தான குருவன்றோ இராமானுசர். இவரைத்தான் "காரேய்கருணை இராமானுசன்" என்று போற்றுகின்றனர் பெரியோர். அதன் பின் மீண்டுமொருமுறை நம்பிகள் இராமானுசரைத் திருக்கோட்டியூருக்குத் தனியே முதலியாண்டானும், கூரத்தாழ்வானும் இல்லாமல் வரச்செய்து சரமசுலோகத்தின் ஆழ்பொருள்களை உபதேசித்தார்.

## கூரத்தாழ்வான் செல்வத்தைத் துறத்தல்



இராமானுஜரைக் காட்டிலும் வயதிலும் ஞானத்திலும் ஏன் சீலத்திலும் விஞ்சி நின்ற கூரேசர். தம் சிஷ்யருள் தலை சிறந்தவர் என்றே யதிராஜரால் மதிக்கப்பெற்றார்.

கூரேசர் செல்வச் செழிப்பு மிகுந்திருந்தவர். அவரது பத்தினி ஆண்டாள் கணவனை விஞ்சிய ஞானி எனலாம். தமக்கிருந்த செல்வமனைத்தும் அறவழியில் செலவிட்டு, ஸ்ரீரங்க யாத்திரை மேற்கொண்டார் கூரத்து ஆழ்வான்.

'தாங்கள் அமுது செய்யும் பாத்திரம், பொன்வட்டிலை மாத்திரம் கொணர்ந்தேன்' என்றாள் பத்தினி.

'அடுத்த வேளை சோறு பற்றிய நிச்சயம் இல்லாத வாழ்வையன்றோ நாம் மேற்கொண்டிருக்கிறோம்; அது எதற்கு? அதை இப்படிக் கொடு' என்று ஆண்டாளிடமிருந்த பொன்வட்டிலை வாங்கி, பக்கத்துப் புதரில் விட்டெறிந்தார். மனைவியின் தயக்கம் போய்விட்டது. இருவரும் விரைந்து ஸ்ரீரங்கம் சேர்ந்தனர்.

அரங்கனைச் சேவித்ததும் இராமானுஜரின் துறவைப் பற்றிக் கேள்வியுற்று, உடனே காஞ்சீபுரம் வந்து அவரிடம் பணிந்து நின்றார் ஆழ்வான்.

புலமைச் சிறப்பும், தூய ஒழுக்க நெறியும், இரக்கப் பண்பும் வைராக்கிய முதிர்ச்சியும் எல்லாவகைப் பூர்த்தியும் உள்ள, கூரத்து ஆழ்வானை சிஷ்யராகப் பெற்றதால் இராமானுஜரின் பெருமை இமயமலைபோல் உயர்ந்தது.

## கூரத்தாழ்வான் சரமஸ்லோகத்தை பெறுதல்



ஸ்ரீரங்கத்தில் ஆழ்வானும், ஆண்டானும் எம்பெருமானாரை தண்டனிட்டுநின்றபோது, "ஆளவந்தார் நம்மை விசேஷ கடாக்ஷம் பண்ணி, பேரருளாளனை நோக்கி பிரபத்தி பண்ணி அருளினது பலனுள்ளதாம் படி நம்பி நம்மை வாழ்வித்தருளினார் கண்டீரோ ?" என்று மகிழ்ந்து கூறி, ஒரு வருஷம் உம்மைக் குற்றேவல் கொண்டபின் சரமச்லோகப் பொருளை உமக்கு உபதேசிக்கப் பணித்தார் நம்பி என்பதையும் வெளியிட்டார்.

உடனே ஆழ்வான் எம்பெருமானார் திருவடிகளில் விழுந்து நிலையற்ற இவ்வுடலை ஓராண்டு நிலைக்கும் என்று எப்படி நம்புவது ? ஒரு ஆண்டு 'தொண்டுக்குப் பதில் ஒரு மாத உபவாஸம்' என்ற ஒரு சாஸ்திர நியமம் உண்டு. அடியேனுக்கு ஒரு மாத உபவாசம் விதித்து, கீதாசார்யன் அறுதியிட்ட இறுதிப் பொருளை உபதேசித்து அருள வேண்டும் என்று பிரார்த்தித்தார் ஆழ்வான்.

# சீதன வெள்ளாட்டி



எம்பெருமானாரின் ஆசார்யர் பெரிய நம்பியின் மகள் அத்துழாய் விவாகம் முடிந்து புக்ககம் சென்ற பின் ஒரு நாள் அவளது மாமியார் அவள் சீதன வெள்ளாட்டி கொண்டு வராததை சுட்டிக் காட்டி ஏளனம் செய்தாள். இதை கேள்வியுற்ற எம்பெருமானார் அருகில் இருந்த முதலியாண்டானை அழைத்து "நீரே அத்துழாய்க்கு சீதன வெள்ளாட்டி; அவளுடன் சென்று வாரும்" என்று நியமித்தார்.

முதலியாண்டான் அத்துழாயின் பணிப்பெண்ணாக அவளது மாமியார் வீடு சென்று குற்றேவல் புரிந்தார்; அரங்கன் கோயில் மணியமாகப் பணிபுரியும் பரம பாகவதர். உலகம் புகழும் எம்பெருமானாரின் முக்கோல், அபசாரம் என்று சொல்லி உடனே அந்த மாமியார் எம்பெருமானாரிடம் ஒடி திருவடிகளில் விழுந்து மன்னிப்பு வேண்டினாள். முதலியாண்டானைத் திருப்பி அழைத்துக்கொள்ள சம்மதித்தார் உடையவர்.




திருக்கோட்டியூர் நம்பிகளின் நியமனத்தின் பேரில், ஆளவந்தாரின் மற்றொரு சீடரான, அழகர்கோயிலைச் சேர்ந்த திருமாலையாண்டான் என்பவரிடம் நம்மாழ்வாரின் ஒப்புயர்வற்ற நூலான திருவாய்மொழியின் அர்த்தங்களை இராமானுசர் கற்றார். கற்கும்போதே ஆசார்யர் கூறிய கருத்துக்களுக்கு மாற்றுக்கருத்துக்களைப் பற்பல இடங்களில் கூறிவந்தார். ஆசார்யருக்கோ இது குறித்து மிக வருத்தம். ஆளவந்தார் இப்பொருள்தான் கூறினார் என்று ஆசார்யர் வாதிட்டார். ஆனால் இராமானுசரோ, ஆளவந்தார் இவ்வண்ணம் கூறியிருக்கமாட்டார் என்று அடித்துக் கூறினார். உடனே ஆண்டான், "நீர் ஆளவந்தாரைக் கண்ணால் கூடக் கண்டதில்லை. உமக்கெப்படித் தெரியும்," என்ற கேட்க, "த்ரோணருக்கு ஏகலைவர் எப்படியோ அப்படியன்றோ அடியேன் ஆளவந்தாருக்கு" என்றருளிச்செய்தார். இதனை உறுதி செய்வதுபோல் திருக்கோட்டியூர் நம்பிகளும், "வசிஷ்டர் விச்வாமித்ரர் ஆகியோரிடம் சிஷ்யராக இராமபிரான் இருந்தாற்போலும் ஸாந்தீபனியினிடத்தில் சீடனாகக் கண்ணன் இருந்தாற்போலும் உம்மிடம் இராமானுசர் சீடராக இருக்கிறார்." என்று கூறியதை நினைவு கூர்ந்து காலக்ஷேபத்தை நடத்தி நிறைவு செய்தார்.



பெரியநம்பிகள் இராமானுசரிடம், ஆளவந்தாரின் திருமகனாரான ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் ஒரு அரும்பொருள் பெற்றுள்ளார். அவரிடம் அதனையும் நாலாயிரம் பாசுரங்களையும் பெறுவீராக என்றார். அதன்படி, இராமானுசர், அரையருக்கு ஆறுமாசம் தொண்டாற்றிவந்தார். அதனால் மகிழ்ந்த அரையர் ஸ்வாமி, நாலாயிர பாசுரங்களையும் கற்பித்து, முக்தியடைவதற்கு கர்மஞான பக்தி சரணாகதி ஆகியவற்றைவிட மேலான உபாயம், ஆசார்ய அபிமானம் என்னும் பொருளைக்காட்டும் சுலோகத்தினை உபதேசித்தார்.

**குருரேவ பரம்ப்ரஹ்ம குருரேவ பரம்தனம்**
**குருரேவ பர:காம: குருரேவ பாராயணம்**
**குருரேவ பரா வித்யா குருரேவ பராகதி:**
**யஸ்மாத்ததுபதேஷ்டாசௌ தஸ்மத்குருதரோ குரு:**

(குருவே மேலான ப்ரஹ்மம், குருவே உயர்ந்த செல்வம், குருவே மிகவும் விரும்பதக்கவர், குருவே உயர்ந்த ஸாதனம், குருவே உயர்கல்வி, குருவே மேலான பயன். பகவானையே உபதேசிப்பதால் உயர்ந்தவனான பகவானை விட குருவே உயர்ந்தவர்) என்பது அந்த சுலோகம்.



பெரிய நம்பி திருமாளிகை வாயிலில் எம்பெருமானார் வரும் போது "உந்து மதகளிற்றன்" என்னும் பாசுரத்தின் கடைசி வரிகளை அநுஸந்தித்துக்கொண்டே, அதன் பொருளில் ஆழ்த்த வண்ணம் நின்றார்.

**"பந்தார் விரலி உன் மைத்துனன் பேர் பாட**
**செந்தாமரைக்கையால் சீரார் வளையொலிப்ப"**

என்று அவர் கூறவும், அப்போதே தாளை உருவிக் கதவைத் திறந்து அத்துழாய் பிக்ஷையிடவும் சரியாயிருந்தது. ஜீயரோ தன் அகக்கண் காட்சிக்கு ஏற்ப "நம்பின்னை பிராட்டியே நேரில் வந்து கதவைத் திறப்பதாகக் கருதி" விட்டார். உடனே அத்துழாயின் பாதங்களில் விழுந்து தண்டனிட்டார். அத்துழாய் ஒன்றும் புரியாமல் ஜீயர் தன்னை தண்டனிட்டது கண்டு திடுக்கிட்டு. உள்ளே ஓடி தகப்பனார் நம்பியிடம் நடந்ததைப் பரபரப்புடன் சொன்னாள்.

நம்பியும் நிதானமாக, "உந்து மத களிற்றன்" அநுஸந்தித்தாரோ ஜீயர் என்று கேட்டு திருப்பாவையில் ஜீயர் ஆழ்ந்துவிட்ட அநுபவத்தைக் கண்டு வியந்தார். அன்று முதல் இராமாநுஜருக்கு 'திருப்பாவை ஜீயர்' என்ற பெயரும் ஏற்பட்டது.

## விஷம் கலந்த உணவு



இராமாநுஜர் வழக்கமாக பிக்ஷை எடுத்து வரும் ஏழு வீடுகளில் ஒன்று அவரிடம் பகையுணர்வு மேலிட்ட கோயில் ஊழியர் ஒருவருடையது. ஸ்தானிகர் சிலர் கூடி, ஜீயர், அவர் வீட்டுக்கு பிக்ஷைக்கு வருகையில் உணவில் விஷத்தைக் கலந்து இடுவது என்று முடிவு செய்தனர்.

குறிப்பிட்டபடி நஞ்சு கலந்த அன்னத்தை மனமின்றி அவர் கலத்தில் இட்ட கோயில் ஊழியரின் மனைவி, முகத்தில் கலக்கத்தோடு வழக்கத்துக்கு மாறாக, கையைத் திருப்பி இட்டதையும், தண்டனிட்டுக் கண் கசக்கி கவிழ் தலையிட்டுச் சென்றதையும் கண்டு ஐயுற்றார் ஜீயர்.

காவிரிக்கரை சென்றதும், கலத்தில் விழுந்த அவ்வுணவை ஒதுக்கி, காக்கைக்கு வைத்தார். காக்கை தலை சுற்றி விழுந்தது. விஷ உணவை நீரில் கழுவி சில நாட்கள் பிக்ஷைக்குப் போகாமல் பட்டினிகிடந்தார் எம்பெருமானார்.

## கிடாம்பி ஆச்சான்

இச்செய்தி எங்கும் பரவி, திருக்கோட்டியூர் நம்பி ஓடோடி வந்தார். சிஷ்யர் குழாம் சுற்றி நிற்க, பட்டினியுடன் இராமானுஜரைக் கண்டார். அப்போது நடுப்பகல், உச்சிவெயில் உடலை தகிக்கிறது; கால் கொப்பளிக்கும் காவிரி மணலில் விழுந்து ஆசார்யரை வணங்கினார் ஜீயர். கீழே விழுந்து கிடப்பவரை எழுந்திரு என்று கூறாமல் சிறிது தாமதித்தார் நம்பி.

கொதிக்கிற மணலில் ஜீயர் திருமேனி துவண்டு கருகுவதைக் கண்ட கிடாம்பி ஆச்சான் என்னும் சிஷ்யர் பொறுக்கமாட்டாமல், "இது என்ன ஆசார்ய சிஷ்யகிரமம்", "கருமுக மாலையைக் கருக விடுவாரோ ?" என்று சினந்து கூறி, தாம் தரையில் விழுந்து, அவரது திருமேனியைத் தம் உடலால் தாங்கி நின்றார்.

இந்தச் செயலைக் கண்ணுற்ற நம்பி "உம்மைத்தான் காணும் தேடுகிறோம். திருமேனிக்குப் பரிவார் உண்டோ என்றே காத்திருந்தோம் அதற்கு நீரே கடவீர்; இன்று முதல் மடத்தில் தளிகை பண்ணி, நீரே இவருக்கு சாதியும்" என்று நியமித்தார்.

நஞ்சிட்டவரை ராமானுஜர் தம் கருணையால் மன்னித்து, திருத்திவிட்டார். எம்பெருமானார் கருணைக்கு முன் எப்பகையும் தலை தூக்கியதில்லை!




யஜ்ஞமூர்த்தி என்ற அத்வைத வித்வான் இராானுசரிடம் வாதிட வந்தார். இருவருக்கும் வாதப்போர் தொடர்ந்தது. “ நான் தோற்றால், உம்முடைய விசிஷ்டாட்வைத மதத்தினை தழுவுவேன். நீர் தோற்றால் என் அத்வைத மதத்தைத் தழுவவேண்டும்” என்று கூறினார். இராமானுசர்

இதனை ஒப்புக்கொள்ளவில்லை. "நீர் தோற்றால் எமது மதத்தைத் தழுவுவது உம் விருப்பம்". ஆனால் நான் தோற்றால் உம்முடைய மதத்தைத் தழுவமாட்டேன். நான் என் மதத்தினை விடமாட்டேன். ஆனால் தோற்றதற்கு அடையாளமாகக் எமது மதத்தின் நூல்களை படிப்பதை விட்டுவிடுவேன் என்று கூறினார். அதன்படி, 17 நாட்கள் வாதம் நடந்தது. முடிவில் காஞ்சி வரதராஜப்பெருமாளின் அருளால் இராமானுசர் வாதப்போரில் வென்றார். யஜ்ஞமூர்த்தி இராமானுசரின் சீடராக ஆனார். இராமானுசர் அவருக்கு "அருளாளப்பெருமாள் எம்பெருமானார்" என்ற திருப்பெயரையும் வழங்கினார்.



ஸ்ரீ பேரருளாளன் – காஞ்சீபுரம்



ஸ்ரீ ராமாநுஜர் காஞ்சீபுரம்



அருளாளப்பெருமாள் எம்பெருமானார்



கர்நாடகத்தில் வாழ்ந்துவந்த அனந்தாழ்வான் என்பவர் இராமானுசரின் சீடராக வேண்டும் என்ற எண்ணத்தில் திருவரங்கம் வந்தார். அவரிடம் அருளாளப்பெருமாள் எம்பெருமானாரைக் குருவாக ஏற்கும்படி நியமித்தார் இராமானுசர். அவ்வண்ணமே அவரும் செய்தார். பிறகு திருவரங்கத்திலேயே தங்கி இராமானுசரின்



காலக்ஷேப கோஷ்டியில் சேர்ந்து கற்றார். அப்பொழுது இராமானுசர் திருவேங்கடவனுக்குத் தொண்டுசெய்யத் திருமலைக்கு யாரேனும் செல்வாருண்டோ? என்று வினவ, அனைவரும் செல்ல அஞ்சியிருந்த காலத்தில், அனந்தாழ்வான் ஒருவர் மட்டும் தைரியமாகச் செல்ல துணிந்தார். "நீர் தான் ஆண்பிள்ளை" என்று இராமானுசர் கூற அவர் "அனந்தாண்பிள்ளை" என்ற பெயர் பெற்றார்.



திருமலையில் அனந்தாழ்வான் கைங்கர்யத்தைக் கேள்வியுற்று திருமலை நம்பியிடம் திருந்தி வந்துள்ள கோவிந்த பட்டரையும் காணவிழைந்து திருவேங்கட யாத்திரை புறப்பட்டார். திருமலை தாழ்வரையில், திருப்பதியில் ஆழ்வார்களைத் திருவடி தொழுது,

திருமலையைக் காலையிட்டு மிதியாமல், தவழ்ந்தவாறே பயபக்தியுடன் சென்றார். மலையேறினார் எம்பெருமானார்.

அரிய பண்பின் இனிய குரல் கேட்டு அயர்ந்து நின்றார் இராமாநுஜர். பிறகு கோனேரியில் நீராடி, அனந்தாழ்வான் அமைத்த "நந்தவனத்தை - ராமாநுசனை"ப் பார்க்கச் சென்றார் இராமாநுஜர். நந்தவனம் கண்டு அனந்தாழ்வானை, "வளர்த்ததனால் பயன்பெற்றேன்" எனக் கொண்டாடினார்.

எம்பெருமானார் தன் பூர்வாசிரமத்து, அம்மான் திருமலை நம்பியிடம் ஸ்ரீ ராமாயணம் கேட்க, திருப்பதியில் ஓராண்டு காலம் தங்கினார். ஆளவந்தாரின் அபூர்வ கருத்துக்களை அம்மான் வாயிலாகக் கேட்டார். திருமலை நம்பி திருத்திப்பணி கொண்ட கோவிந்த பட்டரைக் கருத்தில் கொண்டே அவர் இங்கு தங்கியது என்னலாம். கோவிந்தருடன் கூடிக்குலாவியிருந்தார்.



## அப்பனுக்கு ஆழியும் சங்கும் அளித்தல்




வடக்கிலிருந்து திரும்புகையில் திருவேங்கடத்துக்கு எழுந்தருளினார் எம்பெருமானார். அங்கு வேதார்த்த சங்க்ரஹத்தையும் உபந்யாஸமாக அருளிச்செய்தார். உபநிஷச் சொற்களுக்குப் பொருள் கூறும் முறைகளைக் குறித்து அரிய பல நுட்பங்களை அதில் வெளியிட்டார்.

அக்காலத்தில், திருப்பதி சந்த்ரகிரி ஆகிய ப்ரதேசங்களை ஆண்டுவந்த அரசனைச் சில சைவப்புலவர்கள், திருமலைத் தெய்வம்



தங்கள் தெய்வமான பரமசிவனே என்று கூறிக் குழப்பிக்கொண்டிருந்தனர்.



அனந்தாழ்வான்

முற்காலத்தில், தொண்டமான் சக்ரவர்த்திக்கு அருள் செய்ய விழைந்த திருவேங்கடவன், அவன் யுத்தம் செய்வதற்காகத் தன் ஆயுதங்களான சங்கு சக்ரங்களைக் கொடுத்து விட்டிருந்தபடியால், பெருமான் தன் கையில் விஷ்ணுதேவனுக்கு அடையாளமான எதுவும் இல்லாதிருந்தான். அதைக்கண்டு சைவர்கள் தங்கள் தெய்வம் என்று வாதிட்டனர். அப்பொழுது இராமானுசர் பற்பல ப்ரமாணங்களையும், யுக்திகளையும் நன்கு காட்டித் திருமலைத் தெய்வம் திருமாலே என நிரூபித்தார். மேலும் திருவேங்கடவன் துறந்திருந்த திருவாழி திருச்சங்குகளை அவன் மீண்டும் தரிக்கச் செய்தார். திருமலைத் திருமாலுக்குப் பூஜை முறைகளையும் நெறிப்படுத்தி அவற்றையெல்லாம் நன்கு நடத்த ஒரு ஜீயர் ஸ்வாமியையும் நியமித்தார். மேலும் பற்பல திருப்பணிகளையும் செய்வித்தார்.

## விற்ற பசுவுக்குப் புல் இடுவதா?



காஞ்சியில் தங்கியபோது, கோவிந்தப் பெருமாள் உடம்பு இளைத்துப் போனது கண்டு உடையவர் “நீர் உடனே ஆசார்யனிடம் திரும்பிச் சென்று, சேவித்து வாரும்” என நியமித்து, சில சிஷ்யருடன் திருப்பதிக்குத் திருப்பி அனுப்பி வைத்தார்.

திருப்பதியில் திருமலை நம்பி திருமாளிகை வாசலில் வந்து தண்டனிட்டு நின்ற கோவிந்தரைக் கண்டதும் அங்குள்ளார் உள்ளே சென்று நம்பியிடம் தெரிவித்தனர். நம்பி சீற்றத்துடன் “பித்தனைப் போகச் சொல்லுங்கள்” என்றார்.

அருகிலிருந்த நம்பியின் தேவிகள், “இளைத்து ஏங்கி வந்துள்ள மருமகனைப் பசியோடு எப்படி அனுப்புவது ? களைப்பும், பசியும் தீர அமுது செய்து, ஆறிச்செல்லட்டுமே” என்றாள். “விற்ற பசுவுக்குப் புல்லிடுவார் உண்டோ ? போகச் சொல்லுங்கள்” என்று கண்டிப்பாகச் சொல்லி முகம் கொடாமலிருந்து விட்டார்.

கோவிந்தப் பெருமாள் மீண்டும் ஸ்ரீ வைஷ்ணவர்களுடன் பெருமாள் கோவிலுக்கு வந்து உடையவரை சேவித்து நின்றார். உடையவர் திருமலை நம்பியின் நிஷ்டையை சிலாகித்து, கோவிந்தப் பெருமாளுக்கு ஆறுதல் கூறி, அவருடன் திருக்கச்சி நம்பியைத் தண்டனிட்டு விடைபெற்று ஸ்ரீரங்கம் புறப்பட்டார்.



எம்பெருமானாருடைய கோஷ்டியில், புதிதாக வந்து சேர்ந்த கோவிந்தப் பெருமாளின் ஞான பக்தி வைராக்கியங்கள், நாளுக்கு நாள் பெருக வளர்ந்தது. கண்டார் அனைவரும், அவரைக் கொண்டாடினர்; கோவிந்தன் முன்னிலையிலேயே பல படியாகக்கூறி, பாராட்டும்

போதெல்லாம். அவரும் 'ஒக்கும் ஒக்கும்' என்று அவர்களையும் காட்டில் தம்மைத் தாமே சிலாகித்துக் கொண்டார்.

எதிராசன் வடிவழகில் ஈடுபட்டு,

**பற்பமெனத்திகழ் பைங்கழல் உந்தன் பல்லவமே விரலும்**
**பாவனமாகிய பைந்துவராடை பதித்த மருங்கழகும்**
**முப்புரி நூலொடு முன்கையில் ஏந்திய முக்கோல் தன்னழகும்**
**முன்னவர் தந்திடு மொழிகள் நிறைந்திடு கமலக் கண்ணழகும்**
**காரிசுதன் கழல் சூடிய முடியும் கன நற்சிகை முடியும்**
**எப்பொழுதும் எதிராசன் வடிவழகு என் இதயத்துளதால்**
**இல்லை எனக்கெதிர், இல்லை எனக்கெதிர் இல்லை எனக்கு எதிரே!!!**

என்று எக்களிப்போடு இருந்தார், பின்னர் எம்பாராக மாறிய கோவிந்தர்.

கோவிந்தரின் வைராக்ய பூர்த்தியைக் கண்ட உடையவர் அவருக்கு ஆச்ரமம் (துறவு) நல்கி, "எம்பார்" எனப்பெயரும் இட்டு, தமக்கு அடுத்தபடி தர்சன நிர்வாகத்துக்கு இளவரசராக்கினார். 'எம்பெருமானார்' என்பதன் சுருக்கமே, 'எம்பார்' ஆனது.



ஸ்ரீ எம்பார் – மதுரமங்கலம்




பலவாண்டுகள் ஆகியும் ஆளவந்தாரின் ஆசைகளை நிறைவேற்றவில்லையே என்ற எண்ணம் இராமானுசரின் உள்ளத்தை வெகுவாக அரித்துக்கொண்டிருந்தது. அதில் முதல் விருப்பத்தினை நிறைவேற்ற புறப்பட்டுவிட்டார் காச்மீரை நோக்கி. அவருடன் அறிவாற்றலும் ஆன்மகுணங்களும் ஒருங்கே அமையப்பெற்ற கூரத்தாழ்வானும் சென்றார். காச்மீரில் என்ன இருந்தது ? ஆம், ப்ரஹ்மஸூத்ரத்துக்குப் போதாயனார் என்ற மஹரிஷி இயற்றிய விரிவான விளக்க உரையான விருத்தியுரை என்ற நூல், காச்மீரில் இருந்த சாரதா



பீடம் என்ற நூல் நிலையத்தில் இருந்தது. அதன் அடிப்படையிலன்றோ பிரம்மசூத்திரத்தின் உரை அமைய வேண்டுமென்று இராமானுசருக்குக் கட்டளை. அதனால் காச்மீர் நோக்கிப் பயணித்துச் சென்றடைந்தனர். அங்கு அரசன் அனுமதி பெற்று இருவரும் விருத்தி உரை நூலினை வாசித்துக் கொண்டிருந்தனர். அவ்விடத்து வித்வான்களால் தூண்டப்பெற்ற அரசன், அவர்களிருவரிடமிருந்தும் போதாயனரின் விருத்தி உரை நூலினை நிர்ப்பந்தமாகப் பறித்துப் பத்திரப்படுத்தி வைத்துவிட்டனர். இராமானுசரோ மிகவும் வருந்தினார். "ஆழ்வான்! இப்படியாகிவிட்டதே. நாம் இப்போது என்ன செய்வது?" என்று கேட்டார். அதற்கு கூரத்தாழ்வானே சிறிதும் வருத்தமோ தயக்கமோ இன்றி "சுவாமீ, தங்கள் அருளால் அந்த நூல் முழுவதையும் நான் வாசித்துவிட்டேன். அதன் பொருள்களை இங்குக் கூறவா அல்லது இரண்டாற்றுக்கு நடுவில் (திருவரங்கத்தில்) கூறவா?" என்று கேட்டார். அதைக் கேட்டு இராமானுசர் மிக மிக மகிழ்ந்து, கூரத்தாழ்வானுடன் திருவரங்கம் வந்தார். ஆசார்ய சிஷ்ய நிலைக்குச் சேர, இராமானுசர் பிரமசூத்திரத்தின் பொருளைக் கூறிக்கொண்டே வர கூரத்தாழ்வான் அதனை எழுதிக்கொண்டே வந்தார். எவ்வெவ்விடங்களில் இராமானுசர் கூறும் பொருள் போதாயனரின் விருத்தி உரை நூலினுடன் பொருந்தவில்லையோ, அவ்விடங்களில் கூரத்தாழ்வான் எழுதுவதை நிறுத்திவிடுவார். அதனைக்கண்டு இராமானுசர் யோசனை செய்து சரியான பொருளைக் கூற ஆழ்வான் எழுதுவார். இவ்வண்ணம் உரை




எழுதி முடிக்கப்பட்டது. பின் நாட்களில் சாரதா பீடத்திலிருந்து சரஸ்வதி தேவி, இவரது பிரம்ம சூத்திரத்தின் விளக்க உரையின் சில பகுதிகளை வாசிக்கச் செய்து கேட்டாள். அதற்குத் தன் அங்கீகாரத்தையும், மகிழ்ச்சியையும் வெளியிடும் விதத்தில், அவ்வுரைக்கு ஸ்ரீபாஷ்யம் என்றும் இராமானுசர்க்கு பாஷ்யகாரர் என்றும் திருநாமங்களை அளித்தாள். இவ்வண்ணம் ஆளவந்தாரின் விருப்பங்களுள் முதலாவது நிறைவேற்றப்பட்டது.

# ஸ்ரீ பராசரபட்டர், ஸ்ரீ வேதவியாஸ பட்டர்



கூரத்தாழ்வானின் குமாரருக்கு எம்பார் திருக்கையாலேயே நாமகரண திருவிலச்சினை சாற்றுவித்து ஆளவந்தார் குறை நீங்க, ஸ்ரீ "பராசுர பட்டர்" என்று திருநாமம் சாத்தினார் உடையவர். பின்னர் பிறந்த ஆழ்வான் குமாரருக்கு வேதவியாஸ பட்டர் என்று பெயர் சூட்டினார். இப்படி ஆளவந்தாரின் மற்றொரு குறையும் நிறைவுறச் செய்தார் எம்பெருமானார்.



ஒருநாள் சின்னஞ்சிறு பட்டர் வீதியில் விளையாடிக்கொண்டிருந்தார். அப்போது ஸ்ரீரங்கம் வீதியில் ஒரு பண்டிதன் பல்லக்கில் பவனி வந்து 'ஸர்வஜ்ஞ பட்டன் வந்தான்' என்று விருது பிடித்துச் சென்றான். அது கண்ட குழந்தை பட்டர், எம்பெருமானார், ஆழ்வான், ஆண்டான், அருளாளப்பெருமாள் எம்பெருமானார் எம்பார் முதலானோர் இருக்க இவர் யாரடா 'சர்வஜ்ஞ பட்டன்' என்ற விருது ஊதி வருகிறான்! என்று இரு கைகளிலும் மண்ணை அள்ளிக்கொண்டு, அவனருகில் சென்று "நீர் ஸர்வஜ்ஞனல்லவா? இது எத்தனை மண்? சொல்லும்" என்றார்.

பண்டிதன் அதற்குப் பதில் சொல்ல வழி தெரியாது வாயடைந்து நின்றான்.

"கெடுவீர்! ஒரு கை மண் என்று சொல்லி விருது ஊதித்திரியமாட்டாதே! அஜ்ஞனாய்விட்டீர், இனி உம்முடைய, 'சர்வஜ்ஞன்' என்ற விருதையும் ஸம்பிரமத்தையும் விட்டுவிடும்" என்றார் சிறு மாமனிதரான பட்டர்.

"அறிவும் துணிவும் மிக்க இவ்வற்புதக் குழந்தை யார்?" என்று அப்பண்டிதன் கேட்க, "ஆழ்வான் குமாரர்" என்றார்கள் அங்கிருந்தோர்.

"பறப்பதன் குட்டி தவழுமோ" என்று வியந்து தம் பல்லக்கில் அமர்த்தி, ஆழ்வான் அகத்தில் பட்டரைக் கொண்டு சேர்த்தான் பண்டிதன்.

# திருக்குருகைப் பிள்ளான்



பிறகு திருப்புல்லாணியில் சேது தர்சனம் பண்ணி, நம்மாழ்வாரின் அவதார ஸ்தலமான திருநகரிக்குச் சென்றார். தம்முடன் வந்த திருமலை நம்பியின் குமாரரான பிள்ளான் என்பவருக்கு நம்மாழ்வார் பெயரைச் சூட்டி, 'திருக்குருகைப் பிரான் பிள்ளான்' என்று அழைத்து, ஆழ்வாரின் விசேஷ கடாக்ஷத்துக்கு இலக்காக்கினார்.

ஆளவந்தார் குறைகளில், நம்மாழ்வார் திருவாய்மொழிக்கு உரை காண வேண்டுவது ஒன்றல்லவா? அதற்காக ஆழ்வானைக் கொண்டு ஸ்ரீபாஷ்யம் தலைக்கட்டினது போல் பிள்ளானைக் கொண்டு திருவாய்மொழி உரை இயற்ற நியமனம் செய்தார். நம் தர்சனத்துக்குப் பிரதம ஆசார்யரான சடகோபர் பெருமையெல்லாம் விளங்க ஸ்தோத்திரம் செய்து திருவடி தொழுதார்.



திருக்குறுங்குடி சேருமுன் உடையவர் மலைநாட்டு திருப்பதிகளின் தலைமைத் தலமாய்த் திகழும் அனந்த புரநகர் சென்று அங்கு பத்மநாபன் கோயிலை ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயப்படி திருத்தியமைப்பது எங்ஙனம் என்று எண்ணமிட்டவாறு அன்றிரவு அங்கு உறங்கினார். அங்கு ஓர்

ஸ்ரீ குறுங்குடிவல்லி ஸமேத ஸ்ரீ வைஷ்ணவ நம்பி – திருக்குறுங்குடி



திருவட்டப்பாறை – திருக்குறுங்குடி



ஸ்ரீ ராமாநுஜர் – திருக்குறுங்குடி



அதிசயம் நிகழ்ந்தது ! திருவனந்தபுரத்தில் இரவு உறங்கியவர் காலையில் கண் விழித்துப் பார்த்தபோது திருக்குறுங்குடி அருகில் திருவட்டப் பாறையில் தாம் கிடப்பதை உணர்ந்தார்; நாம் ஒன்று நினைக்க அவன் ஒன்று நினைத்தான் என்று ஆறுதல் பெற்று, காலைக்கடன் முடித்து, அருகில் ஓடிய அருவியில் நீராடி வட்டப்பாறையில் அமர்ந்து திருமண்காப்பு அணிந்தார்.



அப்போது முதியவர் ஒருவர் அங்கு வந்து உடையவரை தண்டனிட்டு, “அடியேனுக்கும் திருமண் இடவேண்டும்” என்று பிரார்த்தித்தார். எம்பெருமானாரும் அவ்வாறே அவருக்குத் திருமண் இட்டுவிட்டார். பிறகு குறுங்குடி நம்பியைச் சேவிக்க கோயிலுக்குச் சென்று தண்டனிட்டு நின்றபோது, அன்று காலை தம் கையால் இட்ட அதே திருமண்காப்புடன் நம்பி சேவை சாதித்தார்; அத்துடன் நில்லாமல் அருள்பாடிட்டுத் தனி ஆசனமிட்டு, அதில் எம்பெருமானாரை ஆசார்ய ஸ்தானத்தில் எழுந்தருள்வித்து, தான் சிஷ்யனாகித் தரையில் நின்று, பஞ்ச சம்ஸ்காராதிகளைப் பெற்று, ஸ்ரீ வைஷ்ணவ நம்பி என்னும் புதிய தாஸ்ய நாமத்தையும் உடையவரிடமிருந்து பெற்றான் குறுங்குடி நம்பி.




தானே சீடனாகவும் ஆசார்யனாகவும் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்ட பதரீநாராயணனை, மங்களாசாஸநம் செய்தருளல்

## புரி ஜகந்நாதர்




கிழக்குக் கடற்கரையில் - ஒடியா மாநிலத்தில் புரீ-ஜகந்நாதரை மங்களாசாஸநம் செய்து அத்தலத்தின் சீர்மையை இராமாநுசர் வெளியிடுதல்



ஐயமுற்ற அடியார்கள் நடுவே, ‘‘ஸ்ரீ கூர்மப்பெருமாள் (ஆமை வடிவு கொண்ட திருமால்) நானே’’ என்று இராமாநுசர் மூலமாக உணர்த்தி, இரு கொடி மரங்கள் உள்ள திவ்ய க்ஷேத்ரமாக ஸ்ரீ கூர்மத்தை ஆக்கி வைத்தல்.




ஸ்ரீவராஹநரஸிம்ஹப் பெருமாளுடன் உரையாடி வந்த தாண்டவ க்ருஷ்ணமாசார்யருக்கு, (இராமாநுசர்) தொடர்பு பெற்றவருக்கே வீடு பேறு (பரமபதம்) என்று ஸிம்ஹாசலப் பெருமாள் அறிவித்தல்.




எம்பாரின் திருத்தம்பி சிறிய கோவிந்தப்பெருமாளுக்கு ஒரு குமாரர் அவதரிக்க, அதைச் செவியுற்று எம்பெருமானார் அங்கு எழுந்தருளி குழந்தைக்கு ''ஸ்ரீ பராங்குசநம்பி'' என்று நம்மாழ்வார் திருநாமம் சாற்றி, தம் குறையையும் நிறைவு செய்து கொண்டார்.

# கண்களால் திருந்தியவர்



அக்காலத்தில் சோழ அரசனின் மெய்க்காவலன் வில்லிதாசன் என்பவன் இருந்தான். பெரிய ரசிகன் அவன். ஒரு நாள் இராமானுசர் தம் சீடர்களுடன் திருவரங்கத்து வீதிகளில் சென்று கொண்டிருந்த பொழுது வில்லிதாசன், வெய்யில் தன் மனைவியின் மீது படாதவண்ணம் அவள் எதிரில் நின்று குடைப்பிடித்துக் கொண்டு

அவளைக் கண்ணாரப்பார்த்துக்கொண்டே பின்புறமாக நடந்து வந்து கொண்டிருந்தான். (மனைவிக்குப் பலரறியக் குடைபிடித்தல் என்பது அக்காலக் கட்டுப்பாட்டுக்குப் புறம்பானது.) அதுகண்ட அனைவரும் பரிகாசச்சிரிப்பை உதிர்த்தனர். இராமானுசர் அவனைத் தம்மருகில் அழைத்து, அவனது நடவடிக்கைக்கான காரணத்தினைக் கருணையுடன் வினவினார். வில்லிதாசர், "சுவாமீ, இவள் கண்களில் நான் மயங்கியவன் இவளுடைய கண்ணழகு வெய்யில் பட்டால் வாடிவிடும். அதன்பொருட்டுக் குடைபிடித்துக்கொண்டே வருகிறேன்" என்றார். "இதனைவிட விஞ்சிய அழகுடைய கண்ணைக்காண வாராய்" என்று அவரை திருவரங்கப்பெருமாள் திருமுன்பு நிறுத்தினார். "திருப்பாணாழ்வாருக்கு காட்டிய கண்ணழகைக் காட்டியருளவேண்டும்" என்று அரங்கனிடம் வேண்டினார் இராமானுசர். "கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய" கண்களைப் பெரியபெருமாள் காட்டக் கண்டார். உள்ளத்தில் ஒரு பெரிய மாற்றம் நிகழ்ந்தது. அன்று தொடக்கமாக மனைவியிடம் இருந்த பித்தினை விட்டு, தம் துணைவியாருடன் அரங்கன் தொண்டிலும் இராமானுசர் தொண்டிலும் ஈடுபட்டார். பகவானிடமும், பாகவதர்களிடமும், ஆசார்யகளிடமும் அவர் பக்தி கொண்டிருந்தார். இராமானுசர், ஒரு தீர்த்தவாரியின்று நீராடச் செல்லுகையில் முதலியாண்டான் திருக்கைகளைப் பற்றிக்கொண்டு சென்றார். நீராடிவிட்டுத் திரும்புகையில் பிள்ளை உறங்காவில்லி தாசரின் கையைப்பற்றிக்கொண்டு வந்தார். உயர்ந்த பக்தர்கள் விஷயத்தில் அவர்களின் ஜாதியைப் பற்றி ஆராயலாகாது என்ற கொள்கையை இராமானுசர் கடைப்பிடித்த விதம் இது.



ஒருநாள் வாய் பேச இயலாத ஒருவன் இராமானுசர் முன்பு கண்ணும் கண்ணீருமாக நின்று கொண்டிருந்தான். அவனது கவலையெல்லாம், தனக்கு வாய் பேசஇயலவில்லையே, இறைவனைத் துதித்து மோக்ஷம் அடைவது எப்படி? தனக்குக் கதியே கிடையாதா? என்பதே. அவனது மனத்துயரத்தின் காரணத்தை யூகித்தறிந்த இராமானுசர் அவனைத் தனியறையில் அழைத்துச் சென்றார். இதனைக் கண்ணுற்ற கூரத்தாழ்வான் இராமானுசர் அவனுக்கு என்ன உபதேசிக்கப்போகிறார் என்று அறிய ஆவலுற்றார். அதனால் அவர் சாவித்துளை வழியாக உள்ளுக்குள் நிகழ்ந்ததை நோக்கினார். ஆம், இராமானுசர் அந்த ஊமையைத் தரையில் அமர்த்தித் தம் திருவடிகளைத் தொடச்செய்து, அவற்றை அவன் தலையில் வைத்து, "எம்பெருமானார் (இராமானுசர்) திருவடிகளே சரணம்" என்பதைக் காட்டிக் கொடுத்தார். "கூரத்தாழ்வானாய்ப் பிறந்து கெட்டனேனே. நானும் ஊமையாக இருந்தால் இராமானுசர் தம் திருவடிகளைத் தாமே மனமுவந்து என் தலையிலும் வைத்திருப்பாரே" என்று கூறி வருந்தினார் கூரத்தாழ்வான். என்னே எதிராசனின் கருணை!

# மாறநேர்நம்பி பெற்ற மகத்தான பேறு



ஆளவந்தாரின் சீடர்களுள் மாறநேர்நம்பி என்ற ஒரு தாழ்ந்த வகுப்பினரும் இருந்தார். ஆசார்ய பக்தி மிக்கவர். அனைத்து வைணவ இலக்கணங்களும் கொண்டவர். அவர் தம் வாழ்நாள் முடிவில், தம்முடன் ஆளவந்தாரிடம் படித்தவரான பெரியநம்பிகளையழைத்து இந்த உடலைக்கொண்டுதான் நான் ஆளவந்தாரின் அருளுரைகளைக்

கேட்டும் அவர்க்குத் தொண்டு செய்தும் உய்வு பெற்றிருக்கிறேன். ஆகவே நான் இறந்த பின்பு இந்த உடலை உரியமுறைப்படி கடைத்தேற்ற வேண்டும். என் உறவினர்கள் கையில் காட்டிக்கொடுக்க வேண்டாம் எனக்கூறிப் பரமபதித்தார். அந்தணரான பெரிய நம்பிகள் தம் நண்பரின் வேண்டுகோளின்படி, அவருடைய உடலுக்கு அந்தணர்க்கு உரிய முறைப்படித் தாமே ஈமக்கடனைச் செய்தார். வேத வைதிக மரபுகளில் சிறிதும் வழுவாதவர்களான பல அந்தணர்களுக்கு இது பிடிக்கவில்லை. அவர்கள் பெரியநம்பிகள் மீது மிகுந்த கோபம் கொண்டிருந்தனர். அதனால் அவரை ஊர்ப்பொது காரியங்களிலும் அரங்கன் தொண்டிலும் சேர்த்துக்கொள்ளாமல் தள்ளிவைத்து விட்டனர். இராமானுசர், தம் ஆசாரியர் இப்படிப்பட்ட பழிச்சொல்லுக்கும், இழிப்புக்கும் ஆளானதைக் கண்டு மிக வருந்தினார். தாம் பெரியநம்பிகளின் திருமாளிகைக்குச் சென்று,''வர்ண மரபினைத்தேவரீர் மீறலாமா ? இந்தக்கைங்கர்யத்தினை அடியேனுக்களித்திருந்தால், தேவரீருக்கு இப்பழிச்சொல்லும், இழிவும் வந்திருக்காதல்லவா ?'' என்று கேட்டார். பெரிய நம்பிகள், ''நான் என்ன இராமபிரானை விடவும். தருமபுத்திரரை விடவும் உயர்ந்தவனா ? அல்லது மாறநேர்நம்பிதான் ஜடாயுவை விடவும் விதுரரைவிடவும் தாழ்ந்தவரா ? நம்மாழ்வார், பாகவதர் யாராயினும் அவர்களுத் தாமடிமை என்று அருளிய ''பயிலும் சுடரொளி'' என்ற பதிகமும், அப்படிப்பட்ட பாகவதர்களை அடைவதே பெரும் பேறு என்று கல்வெட்டாக உரைத்த ''நெடுமாற்கடிமை'' என்ற பதிகமும் கடலோசையா ? பகவானின் அடியவர்கள் எக்குலத்தவராயினும் மதிக்கத்தக்கவர் என்று தம் நிலைப்பாட்டினைத் தெளிவாகக் கூறினார். அடுத்தாற்போல், திருவரங்கத்து எம்பெருமானின் சித்திரைத் திருவிழா வந்தது. அதில் திருத்தேர் தினத்தினன்று , பெரிய நம்பிகளின் இல்லத்தருகில் வந்த திருத்தேர் மேற்கொண்டு நகர மறுத்தது. எத்தனை இழுத்தும் நகரவில்லை. அதற்குக் காரணம் பெரிய நம்பிகளின் திருமகளார் சிறு பெண்பிள்ளை, அத்துழாய் என்பவள், திருத்தேர் முன்பு நின்று, உம்பக்தர் உம்முடைய தொண்டினை விட்டு இப்படி இல்லத்தில் தனித்திருக்கிறார் இது ந்யாயமா ? என்று மனமுருகக் கேட்டதேயாகும். திருவரங்கத்தெம்பெருமான், அர்ச்சகர் மூலம் ஆவேசித்து ''பெரியநம்பிகள் வடம் தொட்டு இழுத்தால் தான் திருத்தேர் நகரும்'' என்று கூறியருள பின்பு பெரிய நம்பிகளைச் சேர்த்துக் கொண்டனர் ஊரார்.

## மீண்டும் ஓராபத்து



அக்காலத்தில் சோழ நாட்டை ஆண்ட அரசன் தீவிர சைவப்பற்றும் வைணவ வெறுப்பும் உடையவனாயிருந்தான். அதனால் அவன் ஆங்காங்குள்ள வைணவர்களிடம் "சிவாத் பரதரம் நாஸ்தி" (சிவனினும் மேற்பட்ட தத்துவமில்லை) என்றெழுதிக் கையெழுத்து வாங்கிக் கொண்டிருந்தான். அரசனின் செல்வாக்குக்கு அஞ்சிய அனைவரும் அதற்கிசைந்து கையெழுத்திட்டனர். அரசனின் அவையில் நாலூரான் என்றொரு வைணவனிருந்தான். அவன் அரசனிடம், "யார் கையெழுத்திட்டு என்ன பயன். மஹா வேதாந்தியாக உள்ள இராமானுசன் கையெழுத்திட்டாலன்றோ இது அர்த்தமுள்ளதாகும்" என்று அரசனைத் தூண்டிவிட்டான். அது கேட்ட அரசன் இராமானுசரை அழைத்துவர ஆட்களை அனுப்பினான். அப்பொழுது இராமானுசர் நீராட எழுந்தருளியிருந்தார். கூரத்தாழ்வான் இராமானுசரைக் காக்கத் தாமே இராமானுசர் வேடத்தில் அரசனிடம் சென்றார். அவையில் கூரத்தாழ்வான், நாரணனே பரம்பொருள் என்ற வேதாந்தக் கொள்கையைக் கூறிச் சொற்பொழிவாற்றினார். சைவ வெறியனான சோழன் அவர் கூறியவற்றைச் செவியேற்க மறுத்தான். மேலும் "சிவாத் பரதரம் நாஸ்தி" என்றெழுதப்பட்ட ஓலையில் கையெழுத்திடவும் வற்புறுத்தினான். அவ்வோலையை வாங்கிய கூரத்தாழ்வான், நாராயணனின் மேன்மை வெளிப்படும்படியாக மேலும் சிலவற்றை எழுதிக் கையெழுதிட்டார். வெகுண்ட அரசன் கூரத்தாழ்வானின் கண்களைப் பிடுங்க ஆணையிட்டான். "விஷ்ணு வைஷ்ணவ த்வேஷியான உன்னைக் கண்ட கண்கள் எனக்கினி வேண்டாம்" எனக்கூறி, கூரத்தாழ்வான், தம் கூரிய நகங்களால் தம் கண்களைத்தாமே பிடுங்கி



வீசியெறிந்தார். உடன் சென்ற பெரிய நம்பிகளையும் அவர்கள் துன்பத்துக்கு ஆளாக்கினர். கூரத்தாழ்வானும் பெரியநம்பிகளும் திருவரங்கத்தை விட்டே வெளியேறினார். வழியில் பெரிய நம்பிகள் பரமபதித்துவிட்டார். (உயிர் நீர்த்தார்) கூரத்தாழ்வான் பாண்டியநாட்டுத் திருமாலிருஞ்சோலை (அழகர்கோயில்) சென்று தங்கிவிட்டார். நீராடி வந்தபின் அரசனின் ஆட்கள் கூரத்தாழ்வானை அழைத்துச் சென்றதை அறிந்த இராமானுசர், தமக்குள்ள ஆபத்தையறிந்து, காவியுடையைத் தற்காலிகமாகத் துறந்து வெள்ளை உடை உடுத்து முதலியாண்டான் தொடக்கமான நாற்பத்தைந்து சீடர்களுடன், கொங்குநாடு வழியாக மேற்குப்பகுதியை (கர்நாடகம்) நோக்கிச்சென்றார். ஆயினும் அவர் மனதில் திருவரங்கம் என்ன நிலையில் உள்ளதோ? அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் என்ன ஆனார்களோ? கூரத்தாழ்வானும், பெரிய நம்பிகளும் என்ன ஆனார்களோ? என்கிற கவலை இருந்து கொண்டேயிருந்தது. அறிந்துவந்து சொல்லுவார் ஒருவருமில்லையே.

# நல்லான் சீடர்கள்



ராமாநுஜரின் சிஷ்யருள ஒருவரான திருமலை சக்ரவர்த்தி ஒரு அனாதைப் பிரேதத்திற்கு சகல மரியாதைகளுடன் ஸ்ரீ வைஷ்ணவ முறையில் தகனம் செய்ய அது தீண்டாதாரின் உடல் என தெரிய வர ஊரார் ஒதுக்கி வைத்தனர். பகவான் அர்ச்சகர் மூலமாக அவர் ஊருக்குப் பொல்லான். ஆனால் நம்க்கு நல்லான் என்றானாம். நல்லான் சக்ரவர்த்தி என்றானவரின் வேடுவ சிஷ்யர்கள் எம்பெருமானார்க்கு நடந்ததை கேள்வியுற்று அவரைத் தேடி மலையடிவாரத்தில் கொட்டும் மழையில் நடுங்கும் குளிர்ல் நள்ளிருட்டில் அவரைகக் கண்டனர். எம்பெருமானார் அவரை விளக்கொளியில் கண்டபோது, அப்பொலிவில் வெறி பிடித்தவர்கள் போன்று மேல் விழந்து அவர் திருவடிகளைப்பற்றிக் கொண்டு, அன்பு மேலிட்டு ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர் நல்லான் சீடர்கள்.

அவரை உபசரிக்கும் ஏற்பாடுகள் நடந்தன; தினை கொணர்ந்தனர், தேன் தந்தனர், தினையை வறுத்து இடித்து மாவாக்கித் தேனில் கலந்து அமுது செய்து இரவைக் கழித்தனர் இராமாநுஜரின் குழுவினர்.

# கொங்குப் பிராட்டி



மறுநாள் காலை வேடர்கள் சூழ ராமானுஜர் கோஷ்டி கொங்கு நாட்டில் கொள்ளைகளம் என்னும் ஊரை வந்தடைந்தது. கொங்கில் பிராட்டி என்னும் இராமானுஜ சிஷ்யை அங்கு தன் கணவருடன் வசித்து வந்தாள். வெள்ளை சாத்தியதால் உடையவரை அடையாளம் தெரியாது தயங்கினாள். உடன் வந்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உணவு தயாரித்து உபசரித்தாள்.

ஸ்ரீரங்கத்தில் உடையவரிடம் தான் பெற்று வந்த திருவடிகளை அவள் பூசித்து வந்தாள். அந்த சோடுகளை அணிந்து, தாம் உடையவரே என்று அடையாளம் காட்டினார் இராமானுஜர். ஐயம் தெளிந்து கொங்கில் பிராட்டி ஆனந்தமடைந்தாள். அதுவரை இராமானுஜரின் திருவடிகளில் சேராத தன் கணவரையும் சேர்த்து வைத்தாள். உடையவர் ஆபத்தில் தப்பியது கேட்டு மகிழ்ந்தாள்; இராமானுஜரும் வெள்ளை நீக்கி, காஷாய உடை தரித்துப் புறப்பட்டார்.



நூற்றி ஐந்து வயது நிரம்பிய பெரிய நம்பியால், கண்ணை இழந்த அதிர்ச்சியைத் தாளமுடியவில்லை. ஆழ்வான் மடியில் தலையை வைத்து மகள் அத்துழாயின் மடியில் கால்களை நீட்டித்தரையில் கிடந்தார். பிராணன் பிரியும் நிலையில் துடித்தது.

"நீர் பிறந்த திருவரங்கம் இருக்க, அந்தப்பெருமாளும் இருக்க, உடையவரும் இருக்க, இங்கு இப்படி கங்கை கொண்ட சோழபுரம்தானா உமக்கு உயிரைவிட இடமாயிற்று ?" என்று கதறினாள் அத்துழாய்.

அதைக் கேட்ட நம்பி சிறிது தெளிந்து, "பாகவதர் மடியைக் காட்டிலும், திருவரங்கம் பெரிதோ ?" என்று கூறிவிட்டு, "ஆளவந்தார் திருவடிகளே சரணம்!" என்று சொல்லிய வண்ணம் திருநாட்டுக்கு எழுந்தருளியிட்டார். பெரிய நம்பிக்கு அவ்வூர் ஸ்ரீ வைண்ஷவர்கள் உரிய முறையில் 'பிரம்ம மேத' ஸம்ஸ்காரம் செய்தனர், ஆழ்வானையும் இரவோடு இரவாக ஸ்ரீரங்கம் கொண்டு சேர்த்தனர்.

நல்லானின் சீடர்களான வேடுவர்களின் உதவியுடன் பயணத்தை மேற்கொண்ட இராமானுசர் மீண்டும் காவியுடை தரித்தார். அவர் தம் கோஷ்டியுடன் பயணத்தைத் தொடர்ந்தார். கர்நாடக மாநிலத்திலுள்ள கோவையூர் என்ற ஊரை வந்தடைந்தனர் இராமானுச கோஷ்டியார். அங்கிருந்தவர் அனைவரும் வேற்று சமயத்தினர். பாஷண்டிகளாக






இருந்தனர். திருமண்காப்புடன் விளங்கும் வைணவர்களை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. அவர்கள் நீர்முகக்கும் தண்ணீர்த்துறையில் திருவடிகளைத் தண்ணீரில் வைத்துக்கொண்டிருக்கும்படி தம் முக்கிய சீடரான முதலியாண்டானை நியமித்தார் இராமானுசர். முதலியாண்டான் சிலகாலம் அவ்வாறே செய்து வர அவரது ஸ்ரீபாததீர்த்த மகிமையால் அவர்கள் மெல்ல மெல்ல இராமானுசரை நெருங்கி உபதேசம் பெற்று,

வைணவர்களாயினர். அதன்பின்பு இராமானுசர் கர்நாடக மாநிலத்தின் தொண்டனூர் என்ற ஊரை வந்தடைந்தார். விட்டல தேவராயன் என்ற ஹொய்சள அரசனின் தலைநகரம் அது. அப்பொழுது அவ்வரசனின் மகள் பேய்பிடித்து மன நிலை கெட்டிருந்தாள். மன்னன் சமண சமயத்தைச் சேர்ந்தவன். அவன் டில்லிப்படையினருடன் யுத்தம் செய்த போது தன் விரலை இழந்தான். அதனால் அவன் குருமார்கள் அவனுக்குப் பேயை விரட்ட உதவவில்லை. ஆனால் தொண்டனூர் நம்பியின் வற்புறுத்தலால் இராமானுசர் பேயை ஓட்ட ஒப்புக்கொண்டார். இராமானுசரின் ஸ்ரீபாததீர்த்தம் அரசன் மகளின் மீது தெளிக்கப்பட, அதனால் அப்பெண்ணைப்பிடித்திருந்த பேய்விலகியது. அதுவே காரணமாக அரசன் இராமானுசரின் அடியவனாக மாறி வைணவனாக ஆனான். விட்டல தேவராயன் என்ற அவனுடைய பெயரும் விஷ்ணுவர்தனன் என மாறிற்று. இதைக்கண்ட சமண குருமார்கள் ஆயிரமவர் வெகுண்டார்கள். இராமானுசரை வாதத்துக்கு அழைத்தார்கள். அவர்கள் அனைவரும் ஒரு காலத்தில் இராமானுசரிடம் கேள்விகள் கேட்டனர். இராமானுசர் தனியாகத் திரைக்குள்ளிருந்து ஆயிரம் வினாக்களுக்கும் ஒரேகாலத்தில்



தொண்டனூர் ஏரி

விடையளித்தார். அங்கு இராமானுசர் எழுந்தருளியிருந்தார். அதுகண்டு அவர்களில் பல வைணவர்கள் ஆனார்கள். சிலர் ஆத்திரமடைந்து தற்கொலையில் தஞ்சமடைந்தனர்.



நம்பி நாராயணன் – தொண்டனூர்



நரசிம்மர் – தொண்டனூர்



ஸ்ரீ ராமாநுஜர் – தொண்டனூர்



ஸ்வாமி ராமாநுஜரின் பிரம்மபுக்கூடை



இராமானுசரின் கர்நாடகப் பயணத்தில் அரசனான விஷ்ணுவர்தனனும் சேர்த்துக்கொண்டான். மைசூர்ப்பகுதியில் யாதவாத்ரி என்றொரு மலை உள்ளது. அம்மலையில் துளசிக்காட்டின் அருகில் பூமியில் பெருமாள் மறைந்திருந்தார். அங்கிருந்த பல



திருநாராயணன் – மேல்கோட்டை (மைசூர்)

பெரியவர்கள் வட நாட்டிலிருந்து வந்த யவனவர்களின் படையெடுப்புக்கு அஞ்சிப்பெருமாளை மறைத்துவைத்திருப்பதாகக் கூறினர். அரசனைக் கொண்டு கோயில் கட்டுவித்து பெருமாளை வெளியில் எடுத்து



கல்யாணி புஷ்கரணி – மேல்கோட்டை

அப்பெருமாளுக்குக் கோயிலும், அவ்விடத்தில் ஒரு பெரிய குளத்தினையும் வெட்டுவித்தார் இராமானுசர். இதுவே மைசூருக்கருகிலுள்ள திருநாராயணபுரம் திவ்ய க்ஷேத்ரமாகும். இப்படியிருக்க, இராமானுசர் தாம் நெற்றியில் திருமண்காப்பு அணிவதற்குத் திருமண் (நாமக்கட்டி) இல்லாமல் போய்விட்டது. அவ்வளவில் கல்யாணி புஷ்கரிணி என்கிற குளத்தின் கரையில் இராமானுசர் தெய்வீக அருள்கொண்டு, தம் கையிலிருந்த த்ரிதண்டத்தால் (முக்கோல்) தரையைக்கீற, அதிலிருந்து பால்போல் பொங்கிவரும் வெள்ளை மண்ணைக்கண்டார். அது நெற்றியில் திருமண்காப்பு அணிய ஏற்ற மண்ணாக இருந்தது. அதனைப் பதப்படுத்தித் திருமண் பெற்றார். அங்குக் கட்டப்பட்ட கோவிலில் மூலவர் மட்டுமே இருந்தார். அந்த திவ்யக்ஷேத்ரம் தற்போது (மேல்கோட்டை என்றும் திருநாராயணபுரம்) என்றும் அழைக்கப்படுகிறது.

## இராமப்பிரியன்

இராமானுசரின் உள்ளம் அந்த மூலவருக்குரிய உற்சவர் எங்கே எங்கே என்றே தேடிக்கொண்டிருந்தது. பெருமாள் அவர் கனவில் வந்து, தாம் (அப்பெருமாளின் திருநாமம் இராமப்பிரியர் என்பதாம்) டெல்லி அரசனான எம்மாடுராயன் அரண்மனையில் இருப்பதாகவும் தன்னை உடனடியாக அங்கிருந்து மீட்டுத் திருநாராயணபுரத்தில் ப்ரதிஷ்டை செய்யவேண்டும் என்றும் கட்டளையிட்டார். துறவி இராமானுசர் டில்லிக்கு நடைப்பயணம் மேற்கொண்டார். அங்கிருந்த முகம்மதிய அரசன் தென்னிந்தியாவில் கொள்ளையடித்த பற்பல கோயில்



விக்கிரகங்களைக் கிடங்கிலிட்டு வைத்திருந்தான். அவன் அனுமதியுடன் இராமானுசர் திருநாராயணனின் உற்சவ மூர்த்தியைக் கிடங்கில் தேடிப்பார்த்தார். எந்த விக்கிரகத்தின் முகஜாடையும் திருநாராயணனின் முகஜாடையை ஒத்திருக்கவில்லை. மிகமிக வருந்தினார் இராமானுசர். இவ்வளவு தூரம் வந்தது பயனில்லாமல் போய்விட்டதே என்னும் துயரம் மேலோங்கி நின்றது. அப்பொழுது அரசனின் மகள் ஒரு விக்கிரகத்தைத் தன் அந்தப்புரத்தில் அன்புடன் வைத்து மகிழ்ந்து



ஸ்ரீ செல்வப்பிள்ளை – மேல்கோட்டை

கொண்டிருக்கிறாள் என்றறிந்தார். அவ்வரசகுமாரி இராமப்பிரியனைத் தன் காதலனாகவே எண்ணித்திளைத்து மகிழ்ந்திருந்தாள். அரசனுக்கு இதனைத்தெரிவித்துப் பெருமாளைத் தரும்படி கேட்டார்இராமானுசர். "நீங்கள் அழைத்து உம்பெருமான் வந்தால் அழைத்துச் சொல்லுங்கள்" என்றான் "என் செல்வப்பிள்ளையே வா" என்று பரிவுடன் இராமானுசர் அழைக்க, அதன்படி பெருமான் காலில் சலங்கை ஒலிக்க முகத்தில் முறுவல் திகழ, கண்களில் களிப்பு மிக, சங்கும் சக்கரமும் மின்னிடத் தானே ஓடிவந்து இராமானுசர் மடியிலமர்ந்தான். இராமானுசர் "என் செல்வப்பிள்ளாய்" என்றழைத்து வந்ததால் அந்த பெருமாளுக்குத் தமிழில் "செல்வப்பிள்ளை" என்றும், வடமொழியில் "யதிராஜ ஸம்பத்குமாரன்" என்றும் பெயராயிற்று.

## தாழ்த்தப்பட்டவர்கள் திருக்குலத்தார் ஆனார்கள்

தம் குழுவினருடன் இராமானுசர் செல்வப்பிள்ளையை எழுந்தருளப்பண்ணிக் கொண்டு அதி வேகமாக மைசூர் நோக்கி நடந்தார். அந்த எம்பெருமானைப் பிரிய மனமின்றி எம்மாடுராயனின் மகள் இராமானுசர் கோஷ்டியுடன் தானும் சென்றாள். அதுகண்டு திகைத்த அரசன் தன் மகளுக்கு மிகுந்த பொன்னும் பொருளும்




தந்தனுப்பினான். திருநாராயணபுரத்தினை நெருங்குகையில், வழிப்பறி செய்யும் கூட்டமொன்று செல்வப்பிள்ளையைத் திருவாபரணங்களுடன் கொள்ளையடித்துச் செல்ல முயன்றது. அப்பொழுது அப்பகுதியில் வாழ்ந்து வந்த தாழ்த்தப்பட்ட இனத்தினர் (தற்காலத்தில் அரிஜனங்கள் என்ற கூறப்படுமவர்கள்) இராமானுசரையும் செல்வப்பிள்ளையையும் அவர்களின் கோஷ்டியினரையும் பாதுகாப்புடன் திருநாராயணபுரம் அடைவித்தனர். அந்த அரசகுமாரியும் செல்வப்பிள்ளையின் திருவடிச் சேர்ந்தாள். செல்வப்பிள்ளையைக் காத்த தாழ்த்தப்பட்டவர்கள் அந்நாள் வரை கோயிலுக்குள் செல்ல அனுமதிக்கப்படாதிருந்தனர் அவர்களை மரபுக்குட்பட்டு, கோயிலுக்குள் சென்று திருநாரணனைத் தரிசிக்க உரிமையும் பெற்றுக்கொடுத்தார் இராமானுசர். அவர்களைத் திருக்குலத்தார் என்ற பெருமதிப்புடன் அழைத்தார். திருநாராயணனின் கோயிலில் தொண்டு செய்வதற்கென ஐம்பத்திருவர் என்று பெயரிடப்பட்ட ஐம்பத்திரண்டு குடும்பங்களை அவ்வூரில் குடியேற்றிப் பெருமாளுக்குப் பூஜை முறைகளையும் வகுத்துப் பன்னிரண்டாண்டுகள், அங்கிருந்தார். கர்நாடகத்தில் தமிழ்ப்பாசுரங்கள் அனுதினமும் முழங்கும்படிச் செய்தார். மேலும் பல சமுதாயப்பணிகளையும் மேற்கொண்டார். அந்த ஊரில் பழுதடைந்திருந்த சிவன் கோயிலையும் திருத்தச்செய்து பூஜைகள் நடைபெற வழிவகுத்தார். தொண்டனூரில் "மோதிதாலாப்" என்று கூறப்படும் மிகச்சிறந்த நீர்த்தேக்கமொன்றை அமைத்தார். திருநாராயணபுரம் கோயிலின் நிர்வாகமும் பூஜை முறைகளும் நன்கு

நடைபெற அங்கு ஒரு மடம் நிறுவி ஒரு ஜீயர் ஸ்வாமியையும் நியமித்தார். கர்நாடகப்பகுதியில் பன்னிரண்டாண்டுகள் இருந்து, இராமானுசர், பற்பல பணிகளை நிறைவேற்றி மனிதநேயத்தின் அடிப்படையில் அமைந்த ஸ்ரீவைஷ்ணவக் கொள்கைகள் நன்கு விளங்குமாறு செய்தார். அவர் கர்நாடகத்தில் செய்திட்ட முக்கியப்பணிகளைப் பட்டியலிட்டால்

1. விட்டல தேவராயனைத் திருத்தியது
2. சமண முனிவர்களுடன் வாதிட்டு வென்றது
3. திருநாராயணப் பெருமாளை வெளிக்கொணர்ந்து கோயில் கட்டுவித்தது.
4. செல்வப்பிள்ளையை டெல்லியிலிருந்து எழுந்தருளப்பண்ணி ப்ரதிஷ்டை செய்தது.
5. ஊரிலுள்ளோர் உபயோகிக்கத் தொண்டனூரில் மோதிதாலாப் என்ற ஏரி வெட்டுவித்தது.
6. அரிஜனங்களை ஆலயத்தில் ப்ரவேசம் செய்ய செய்தது.
7. பஞ்ச நாராயணர்களை ப்ரதிஷ்டை செய்தது
8. திருநாராயணப்பெருமாளின் பூஜை முறைகளை வழிப்படுத்தியது
9. திருநாராயணன் தொண்டிற்காக ஐம்பத்திருவரை நியமித்தது.

என்று நீண்டுகொண்டே செல்லும்.



ஸ்ரீ ராமாநுஜர்
மேல்கோட்டை

தம் வேடமணிந்து தம்மைக்காப்பாற்றிய கூரத்தாழ்வானைப் பற்றி மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டான் என்பவர் மூலம் இராமானுசர் அறிந்து கொண்டார். அவர் தமிழகத்தை விட்டு வெளியேறக் கரணமான சோழ அரசன், கழுத்தில் நோய்வாய்ப்பட்டு (Throat Cancer) புழுத்து மாண்டான். அதுவே காரணமாக அவனை "க்ருமிகண்ட சோழன்" (புழுத்த கழுத்தை உடையவன்) என்பார் நம்மாசார்யர்கள். மேலும்,



அவனை "அவ்யபதேச்யன்" (பெயர்சொல்லத்தகாதவன்) என்றும் கூறுவர். தமிழகத்துக்கு வர இப்பொழுது இராமானுசர்க்குத் தடையில்லை. ஆகவே திருவரங்கம் செல்ல முனைந்தார். திருநாராயணபுரத்து அடியவர்கள் இராமானுசரின் பிரிவைத் தாங்க இயலாது கண்ணீர் சொரிந்தனர். இராமானுசர் தம்மைப்போல் ஒரு விக்ரஹம் செய்து அதனை ஆரத்தழுவி அத்திருமூர்த்தியை அவர்களுக்கு அளித்தார். "தமருகந்த திருமேனி"யாக இன்றும் திருநாராயணபுரத்தில் இராமானுசர் அவ்விக்கிரகத்தின் வடிவில் விளங்குகிறார்.

இராமானுசர் அவர்களிடம் பிரியாவிடை பெற்று, திருவரங்கம் வந்தடைந்தார். திருவரங்கத்தில் கூரத்தாழ்வான் எழுந்தருளியிருந்தார். இவருடைய சந்திப்பும் உணர்ச்சிப் பிழம்பாயிருந்தது. "ஆழ்வான் உமக்குப் கண் போயிற்றே" என்று இராமானுசர் வருந்த, "ஒரு பாகவதனின் திருமண்காப்பைப்பர்த்து கோணலாக இருக்கிறது என்றேனும் நினைத்திருக்க மாட்டேனோ ? அதன் பயன்தான் கண் போயிற்று. தேவரீர் தந்தருளிய ஞானக்கண் இருக்கும்போது ஊனக்கண் இல்லாடிவிடில் என்ன குறை" என்று ஆழ்வான் அருளினார். என்னே ஆழ்வான் மாண்பு. இராமானுசரோ ஆழ்வான் மீண்டும் கண் பெறவேண்டும் என்று உறுதியாக இருந்தார். அதனால் காஞ்சீ வரதராஜப்பெருமாளைக் குறித்து ஒரு ஸ்தோத்திரம் பண்ணவேண்டும் என்று ஆழ்வானை நியமித்தார். ஆழ்வானும் அவ்வண்ணமே "வரதராஜ ஸ்தவம்" என்ற ஸ்தோத்ரம் செய்து அதற்குப்பயனாகக் கண்ணைக் கேட்காமல் வரதராஜப்பெருமாளிடம் தமக்குக் கிடைக்கும் பேறு தாம் கண்ணிழக்கக் காரணமான நாலூரானுக்கும் கிடைக்கவேண்டும் என்று வேண்டினார். அவ்வண்ணமே அருள் செய்த அருளாளப்பெருமாள், தம்மையும் இராமானுசரையும் பார்க்கும்போது மட்டும் கூரத்தாழ்வானுக்குக் கண்தெரியும்படி அருள்புரிந்தார். பகைவனுக்கும் இரங்கும் மனம் கொண்ட பண்பாளரன்றோ கூரத்தாழ்வான்.



பெரியாழ்வாரின் திருமகளாரான ஸ்ரீ ஆண்டாள் திருமாலிருஞ்சோலை (அழகர்கோயில்) அழகருக்கு நூறு தடா வெண்ணெயும் நூறு தடா அக்காரவடிசிலும் ஸமர்ப்பிக்க விரும்பி அவ்விருப்பத்தைத் தம் பாசுரத்திலும் பொறித்துவைத்தார்.

ஸ்ரீ ஸுந்தரவல்லி ஸமேத ஸ்ரீ ஸுந்தரராஜன் – திருமாலிருஞ்சோலை

ஆனால், தாம் எழுந்தருளியிருந்த காலத்தில் அவ்விருப்பம் நிறைவேறவில்லை. இராமானுசர், திருவரங்கத்துக்கு மீண்டுவந்தபிறகு, பல திவ்யதேசங்களுக்கு யாத்திரை மேற்கொண்டு, திருமாலிருஞ் சோலையில் அழகருக்கு நூறு தடா வெண்ணெயும் நூறு தடா அக்காரவடிசிலும் ஸமர்ப்பித்தார். அதன் பின் ஆண்டாள் அவதரித்த ஊரான ஸ்ரீவில்லிபுத்தூர் எழுந்தருளி, கோயிலில் ஆண்டாளைத் தொழுதார். அப்பொழுது ஆண்டாள் ஒரு சிறுபெண் குழந்தையின் வடிவில் வந்து, இராமானுசரை "எம் கோயில் அண்ணரோ" என்றருளினார். தங்கை ஆசைப்பட்டதை நிறைவேற்றுமவனன்றோ தமையன்? ஆகவே ஆண்டாளுக்கும் அண்ணரானார் இராமானுசர்.



ஸ்ரீ ஆண்டாள்

## திருவரங்க நிர்வாகம்




கூரத்தாழ்வானின் சீடரான திருவரங்கத்தமுதனார் என்பவரின் ஆதீனத்திலிருந்த திருவரங்கன் கோயிலின் முழு நிர்வாகத்தினையும் தாமே ஏற்றார் இராமானுசர். அதனைச் செவ்வனே நிகழ்த்தியமை இராமானுசரின் நிர்வாகத் திறனுக்குச் சிறந்த எடுத்துக்காட்டு திருவரங்கம் கோயிலிலுள்ளாரைப் பத்துக்கொத்துக்களாக

(பிரிவுகளாக)ப் பிரித்து அவரவர்களைத் தகுதிக்கேற்பப் பணியிலீடு படுத்தினார். திருவரங்கக்கோயிலின் வரவு செலவுகளை நெறிப்படுத்துதல், பெருமானுக்கு நன்முறையில் பூஜை நடைபெறுதல், அமுதுபடி, திருமடைப்பள்ளிப் பொருள்கள், பால், தயிர் முதலானவற்றைச் சேகரித்துச் சேமித்தல், கோயிலின் சொத்துக்களைப் பார்த்து அவற்றினின்றும் வரவேண்டிய வரவுகளைக் குறைவின்றிப் பெறுதல், பூந்தோட்டங்களைப் பராமரித்தல், சந்தனம், வாசனைத் திரவியங்களைச் சேகரித்தல், கோயில் பராமரிப்பு, பெருமானின் வாகனங்கள் பராமரிப்பு, வேதம் திவ்வியப்பிரபந்தங்களை ஓதுதல் என்றிப்படிப்பட்ட தொண்டுகளுக்குத் தக்க பணியாளர்களையும், உரிமையாளர்களையும் நியமித்தார். அவர்கள் ஒவ்வொருவரின் செயல்களில் உள்ள குறை நிறைகளை ஆராய்ந்து நெறிப்படுத்தினார். ஒவ்வொரு நாளும் ஆகும் பொருட்செலவுக்கும் பணச்செலவுக்கும் சரியான கணக்கெழுதச் செய்து கையெழுத்திட்டும் வந்தார். பெருமானுக்குப் பயன்படுத்தவேண்டிய ஆடைகள், ஆபரணங்கள் ஆகியவற்றின் கணக்குகளையும் நன்கு பராமரிக்க ஆவனசெய்தார். ஊரின் அமைப்பையும் கோயில் தொண்டுக்கு ஏற்றவாறு நெறிப்படுத்தினார். சொல்வதென்றால் தற்காலத்தவர் கூறும் நவீன நிர்வாகத்திறன் உக்திகளனைத்தையும் சற்றேறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நடைமுறைக்குக் கொண்டு வந்திருந்தார் இராமானுசர். சமுதாயத்தின் அனைத்து வகுப்பு மக்களையும் சமமாகக்கண்டு, அவரவர் தகுதிக்கேற்ப அரங்கனின் தொண்டில் ஈடுபடுத்திய மனிதநேயம் உள்ளத்தை உருக்குமன்றோ ? தமது மடத்தில் வேத சாத்திர நூல்களின் ஆராய்ச்சிக்கும் வழிவகுத்தார். இராமானுசரின் பன்முகப்பெருமைகளை நன்கு உணர்த்த திருவரங்கத்தமுதனார், இராமானுசரின் புகழைக்கூறும் "இராமானுச நூற்றந்தாதி" என்ற 108 பாக்கள் கொண்ட துதி நூலை அருளினார். இது "ப்ரபன்ன காயத்ரி" என்ற பெருமை பெற்றது. சொற்செறிவும் பொருட்செறிவும் கொண்ட இந்த நூல் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தின் முடிவில் சேர்க்கப்பட்டு பெருமாள் கோயில்களில் வேத விற்பன்னர்களால் ஸேவிக்கப்படுகிறது. திருவரங்கனே ஒரு நாள் தன் புறப்பாட்டில், இராமானுசரை வரவேண்டாம் என்று நிறுத்தி அவரது துதி நூலான இராமானுச நூற்றந்தாதியைக் கேட்டருளினான். என்னே ! இராமானுசர் பெருமை !




இராமானுசர், சைவ வெறியானனான ஒரு சோழ அரசனால் கடலில் வீசியெறியப்பட்ட தில்லைத் திருச்சித்திரகூடத்தில் (சிதம்பரம்) எழுந்தருளியிருந்த திருமாலைத் தேடிக்கொணர்ந்து திருப்பதியில் ப்ரதிஷ்டை செய்து அவருக்கும் பூஜைகள் நடைபெற ஆவன செய்தார்.



ஸ்ரீ புண்டரீகவல்லி ஸமேத ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாள் – திருச்சித்ரகூடம்

திருமலைத் திருமாலுக்குப் பூஜை முறைகளையும் நெறியப்படுத்தி அவற்றையெல்லாம் நன்கு நடத்த ஒரு ஜீயர் ஸ்வாமியையும் நியமித்தார். மேலும் பற்பல திருப்பணிகளையும் செய்வித்தார். இராமானுசர் திருமலையில் எழுந்தருளியிருந்தபோது மடத்துக்குத் தும்பையூர் கொண்டி என்னும் ஒரு ஆயர் மாது, தயிர் கொடுத்துக் கொண்டிருந்தாள். அவளுக்குத் தயிருக்கு உண்டான பணம் கொடுக்கையில், அது தனக்கு வேண்டாம் என்றும் தனக்கு முக்தி நல்க வேண்டும் என்றும் இராமனுசரை வேண்டினாள். அவ்வண்ணமே அவளுக்கு முக்தியளிக்கவேண்டும் என்று, வேங்கடவனுக்கு ஒரு ஓலை எழுதி அளித்தார். அவளும் அதன்படி மோக்ஷம் பெற்றாள்.



ஸ்ரீ ராமானுஜர் – திருப்பதி



இவ்வுலகோர்கள் இறையருள் பெறாமல் படும் அல்லல்களை நினைத்து ஒவ்வொரு கணத்திலும் மனம் வருந்தினார் இராமானுசர். ஒரு பங்குனி உத்திரத்திருநாளன்று, அரங்கன் தன் தேவியான ஸ்ரீரங்க நாச்சியாருடன் ஒரே ஆசனத்தில் கொலுவீற்றிருந்தபோது, உலககோர்படும் இடர் நினைவுக்கு வந்து அரங்கனிடம் சரணாகதி பண்ணினார். எம்பெருமான் தந்த சாத்திரத்தினை மதியாமல் உலகத்தவர்கள் பாபங்களைப்பண்ணி பிறவிச்சுழலில் சிக்குண்டிருக்கிறார்கள். இந்த உலகோர்கள் அவனை அடைய எளிய வழி ஏதும் இல்லை. சாத்திரங்களில் கூறப்பட்டுள்ள வழிகளோ, முதலில் அறிய அரியவை. அறிந்தாலும் ஆற்ற அரியவை. இவர்கள் உய்ய உத்தம உபாயம் சரணாகதி தான் என்று அறுதியிட்டார். அதனால் அனைவரின் பொருட்டும் அன்றே அவர் அரங்கனைச் சரணடைந்தார். அப்படி சரணடைந்தபடியைக் காட்டும் இராமானுசரின் உயர்ந்த நூல் கத்யத்ரயம் என்று கூறப்படுகிறது. இவர் செய்த சரணாகதிக்குப் பயனாக அரங்கன், இராமானுசருக்கும், அவருடன் ஸம்பந்தமுள்ளவர்களுக்கும், அவர்களுடன் பரம்பரையாகத் தொடர்புள்ளவர்களுக்கும் மோக்ஷம் தந்தோம் என்று உறுதியளித்தான்.



ஸ்ரீ ராமாநுஜர் – ஸ்ரீரங்கம்

# ஏற்றம் தரும் எழுபத்து நால்வர்




தமக்குப்பின் வைணவக் கொள்கைகள் உலகில் விரிந்து பரந்து அனைவரின் ஆன்மிக வாழ்விலும் ஒளிவிளக்கேற்ற வேண்டும் என்ற எண்ணத்தில், இராமானுசர் எழுபத்து நான்கு ஆசாரியர்களை நியமித்தார். ஆங்காங்குள்ள அடியவர்களுக்குப் பஞ்சஸம்ஸ்காரம் செய்து அவர்களுக்குத் தம்முடைய ஸம்பந்தத்தினை உண்டாக்கித் தரவேண்டும் என்று அந்த எழுபத்து நால்வருக்கும் நியமித்தார். அப்படிப்பட்ட ஆசாரியர்களின் பரம்பரையில் வந்தவர்கள் தம்மை ஆச்ரயித்தவர்களுக்கு இராமானுசருடன் ஸம்பந்தத்தினை உண்டாக்கி அதுவே காரணமாக முக்தியடையச் செய்கின்றனர்.



"உய்ய ஒரே வழி உடையவர் திருவடி" என்ற நன்மொழிப்படி, இராமானுசரின் ஸம்பந்தத்தால் மோக்ஷம் நிச்சயம். அந்த ஸம்பந்தத்தைப் பெற வழி, இராமானுசர் நியமித்த ஆசார்ய புருஷர்களின் திருவம்சத்தவர்களுள் யாரேனும் ஒருவரை நாம் ஆசார்யனாகக் கொண்டு பஞ்சஸம்ஸ்காரம் செய்து கொள்ளுவதே ஆகும். "அரங்கனே தஞ்சம் என்றுரைத்த இராமானுசன் திருவடிகளே தஞ்சம்"

# திருவுருவ ப்ரதிஷ்டை



இராமானுசர் நூற்றிருபதாவது திருநக்ஷத்திரத்தில் (வயதில்), மிகத் தளர்ந்து, காம்பினின்று இற்றுவிழும் பழம்போன்ற நிலையை எய்தினார். திருநாடாம் வைகுந்தலோகம் எழுந்தருள விரும்பினார். முதலியாண்டானின் திருமகனாரான கந்தாடையாண்டான் என்னும் ஆசார்யர், இராமானுசரின் திருமேனி (விக்கிரஹம்) ஒன்றைச் செய்வித்து, இராமானுசரிடம் காண்பித்தார். அதனை இராமானுசர் கட்டித் தழுவித் தம் தேஜஸ்ஸை அதனுள் புகுத்திவைத்தார். இராமானுசர் இந்த நிலவுலகிலிருந்த போதே அவருடைய விக்ரஹத்தை இராமானுசரின் அவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் ப்ரதிஷ்டை செய்தார். இந்தத் திருமேனியை “தானுகந்த திருமேனி” என்று கொண்டாடுவர். இன்று நாம் ஸ்ரீபெரும்பூதூர் இராமானுசர் ஸன்னிதியில் வணங்கும் இராமானுசர் கந்தாடையாண்டானின் ப்ரதிஷ்டையே ஆவார்.




ஸ்ரீபாஷ்ய ஸிம்மாஸனத்தை நடாதூர் அம்மாள் என்ற ஆசார்யருக்கும், பகவத்விஷய ஸிம்மாஸனத்தை பராசரபட்டருக்கும் அருளினார். தம் சீடர்களை அழைத்து அவர்களுக்காகப் பற்பல உபதேசங்களை அருளினார். அனைவரையும், பகவானிடமும், பாகவதர்களிடமும் ஆசார்யர்களிடமும் அபசாரம் நேராதபடி கவனமாகப் பார்த்துக்கொள்ளும்படி வேண்டிக்கொண்டார். திருவரங்கன் திருக்கோயில் ஊழியர்களையும், மற்வர்களையும் அழைத்து, தாம் தம் வாழ்நாளில் அவர்களிடம் அபசாரப்பட்டிருந்தால், அவர்கள் மனம் புண்பட

நடந்திருந்தால், அனைவரும் பொறுத்தருளவேண்டும் என்று மன்னிப்பு வேண்டினார். பின்பு எம்பார் மடியில் திருமுடியையும், வடுகநம்பி மடியில் திருவடிகளுமாய், அரங்கன் திருக்கோயிலுக்கெதிரில் தாம் எடுத்த திருமேனியை விடுத்து, பரமபதத்து ஆதிசேஷன் திருமேனியிற் சேர்ந்தார். சுற்றுமிருந்த அடியவர்கள் அனைவரும், இராமானுசரின் பிரிவு தாங்காமல் வருந்தித் துடித்தனர். அவரைப்பிரிந்த திருவரங்கத்து எம்பெருமான் மிக்க வருத்தமுற்றான். அவருடைய திருமேனியை, திருவரங்கக் கோயிலின் வசந்தமண்டபத்தில் திருப்பள்ளி படுத்த (அடக்கம் செய்ய) நியமித்தான். அவ்வண்ணமே திருவரங்கம் கோயிலிலுள்ள வசந்த மண்டபத்தினிலேயே திருப்பள்ளி படுத்தினார்கள். திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள இராமானுசன் திருமேனி "தானான திருமேனி" என்று கொண்டாடப்படுகிறது.

## இராமானுசர் செய்தருளிய நூல்கள்

இராமானுசர் நவநிதிகள் என்றும், நவ ரத்தினங்கள் என்றும் சொல்ல வல்ல ஒன்பது நூல்கள் அருளிச்செய்தார். அவற்றுள் ஐந்து வேதாந்தகருத்துக்களை விவரிப்பவை. மூன்று சரணாகதியை விளக்குமவை. ஒன்று இறைவனின் பூஜை முறையை விளக்குவது. அவையாவன.

1. வேதாந்த தீபம் (பிரம்ம சூத்திரத்தின் சுருக்கமான உரை)
2. வேதாந்த ஸாரம் (பிரம்ம சூத்திரத்தின் மற்றுமொரு உரை)
3. வேதார்த்த ஸங்க்ரஹம் (உபநிஷத் வாக்கியங்கள் சிலவற்றின் உண்மைப்பொருள்)
4. ஸ்ரீ பாஷ்யம் (பிரம்ம சூத்திரத்தின் விரிவான உரை)
5. கீதா பாஷ்யம் (பகவத் கீதையின் விளக்கவுரை)
6. சரணாகதி கத்யம் (சரணாகதி செய்தல்)
7. ஸ்ரீரங்க கத்யம் (சரணாகதி செய்தல்)
8. ஸ்ரீவைகுண்ட கத்யம் (சரணாகதி செய்தல்)
9. நித்யம் (இறைவனின் பூஜை முறை) என்பவையாகும்.

### முடிவுரை

மனித இனம் இவ்வுலகில் இறையுணர்வுடனிருந்து நற்கதியடையத் தம் வாழ்க்கை முழுவதையும் கழித்தவரான இராமானுசரின் ஆயிரமாவது ஆண்டு நெருங்கும் இவ்வேளையில் அவருடைய திருநாமங்களையும் பெருமைகளையும் உணர்ந்து ஒரு ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்யரிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெற்று எத்திறத்தும் இங்கும் எங்கும் இன்பம் அடைந்து உய்வோமாக!

## ராமாநுஜரின் முக்கியப்பணிகள்

1. எம்பெருமானின் தொண்டர்களில் சாதியையிட்டு ஏற்றத்தாழ்வினைக் காணலாகாது என்பதைக் காட்டியது.
2. பசியென்று வருபவர்களுக்குப் பசியாற்றாமலிருப்பது தவறு என்பதைக் காட்டியது.
3. ஆசார்யரை அனைத்துக்கும் மேலாக மதிக்க வேண்டும் என்பதைக் காட்டியது.
4. தன்னலமற்ற இறைத்தொண்டு செய்ய வேண்டுமென்று காட்டியது.
5. அனைவரும் மோக்ஷமடையத் தகுதி பெற்றவர்கள் என்று காட்டியது.
6. அனைவருக்காகவும் அரங்கனிடம் சரணடைந்தது
7. திருக்குலத்தார்களுக்குக் கோயிலில் அனுமதியளித்தது.
8. திருவரங்கன் கோயிலில் நிர்வாக முறைகளைச் சீர்திருத்தி அமைத்தது.
9. திருவேங்கடவன் திருமாலே என்று ஸ்தாபித்தது.
10. நவநிதிகள் என்னலாம்படி ஒன்பது க்ரந்தங்கள் அருளியது.
11. மிக்க ப்ரயாசையுடன் பெற்ற ரஹஸ்யார்த்தத்தினை அனைவருக்கும் வெளியிட்டது.
12. திரு நாராயணபுரத்தில் பெருமானை ப்ரதிஷ்டை செய்தது.
13. செல்வப்பிள்ளையை முகம்மதிய அரசனிடமிருந்து மீட்டு வந்தது.
14. தொண்டனூரில் ஏரி அமைத்தது.
15. காஷ்மீருக்குச் சென்று வ்ருத்தியுரையைச் சேவித்து ஸ்ரீபாஷ்யம் செய்தருளியது.
16. திருவாய்மொழிக்கு உரை எழுதுவித்தது.
17. திருப்பதியில் கோவிந்தராஜனை ப்ரதிஷ்டை செய்தது.
18. ஆசார்யரின் ஸ்ரீபாத தீர்த்த மகிமையைக் காட்டியது
19. மனித நேயம் ஆன்மீகத்தின் அடிப்படை என்பதை வெளிப்படையாகக் காட்டியது
20. பிற்காலத்தவரும் உய்வுபெற எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளை நியமித்தது.

மணவாளமாமுநிகள் அருளிச்செய்த

## எம்பெருமானார் வாழித்திருநாமங்கள்

சீராரும் எதிராசர் திருவடிகள் வாழி
திருவரையிற்சாத்திய செந்துவராடைவாழி
ஏராரும் செய்யவடிவு எப்பொழுதும் வாழி
இலங்கிய முந்நூல்வாழி யிணைத்தோள்கள் வாழி
சோராத துய்யசெய்ய முகச்சோதி வாழி
தூமுறுவல்வாழி துணைமலர்க்கண்கள் வாழி
ஈராறு திருநாமம் அணிந்த வெழில் வாழி
இனிதிருப்போடு எழில் ஞானமுத்திரை வாழியே

அறுசமயக் செடியதனை யடியறுத்தான் வாழியே
அடர்ந்துவரும் குதிட்டிகளை யறத்துறந்தான் வாழியே
செறுகலியைச் சிறிதுமறத் தீர்த்துவிட்டான் வாழியே
தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே
மறையதனின் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே
மாறனுரைசெய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே
அறமிகு நற்பெரும்பூதூர் அவதரித்தான் வாழியே
அழகாரும் எதிராசர் அடியிணைகள் வாழியே

## நாள்பாட்டு

சங்கரபாற்கர யாதவபாட்டப் பிரபாகர் தங்கள்மதம்
சாய்வுறவாதியர் மாய்குவரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்
வெங்கலி யிங்கினி வீறுநமக்கிலை யென்று மிகத்தளர்நாள்
மேதினி நஞ்சுமை யாறுமெனத் துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளி பராங்குசமுன்னவர் வாழ்வு முளைத்திடுநாள்
மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்
செங்கயல்வாவிகள் சூழ்வயல்நாளும் சிறந்தபெரும்பூதூர்ச்
சீமானிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரைநாளே





























ஸ்ரீரங்கம் கரிசைலம் அஞ்சனகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ
ஸ்ரீகூர்மம் புருஷோத்தமம் ச பதரீ நாராயணம் நைமிசம் |
ஸ்ரீமத் த்வாரவதீ ப்ரயாக மதுரா அயோத்யா கயா புஷ்கரம்
சாளக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமானுஜோயம் முநி: ||

- ஸ்ரீ பராசரபட்டர் அருளிய ஸ்ரீரங்கநாத
ஸ்தோத்ரத்திலிருந்து